



# பட்டு மலர் மேனிக்கு
# பாவையர் நித்தம் விரும்பும்
# விநிபா
## சந்தன முக பவுடர்







சருமத்திற்கு மென்மையும், பொலிவும் அளிக்கவல்ல மைசூர் சந்தனம், இந்திய அபூர்வ மூலிகைகள், மேனாட்டு வாசனை திரவியங்கள், உயர்ந்த அத்தர் வகைகள், தூய புனுகு, ஜவ்வாது, அரகஜா இவற்றை ஒருங்கே கலந்து விஞ்ஞான ரீதியில் நவீன மைக்ரோஃபைன் முறையில் தயாரிக்கப்படுகின்றன.




**விநிபா ப்ராடக்ட்ஸ்**
'கோகுல் கார்டன்ஸ்' கும்பகோணம்.

Criterion VP 3510 TM

# இசை விழா சிறப்பிதழா?



# துணுக்குச் சிறப்பிதழா?

## வட்டமேஜை

● இசை விழாச் சிறப்பிதழ் மிகவும் அருமையாக இருக்கிறது. வழுவூர் திரு ராமையா பிள்ளையும் திருமதி சந்தாராணி ரகுபதியும் கருத்துக்களைப் பரிமாறியிருப்பது நன்றாகவே உள்ளது. வழுவூரார் 'முன்பு நடனமாடுபவர்களுடன் பக்கவாத்தியக்காரர்களும் நின்று கொண்டே ஆடுவார்கள். இதனை மாற்றி வலப்பக்கம் உட்கார்ந்து வாசிக்கும் வழிமுறையை ஏற்படுத்தினேன்' என்று குறிப்பிட்டுள்ளார்.

இம்மாதிரி பக்க வாத்தியக்காரர்கள் அமர்ந்து வாசிப்பது என்ற வழக்கத்தை கலாக்ஷேத்ரா திருமதி ருக்மிணி தேவிதான் ஆரம்பித்தார்கள் என்று பிரபல மிருதங்க வித்வானும், நடன ஆசிரியருமான மாங்குடி திரு துரைராஜ ஐயர் சொல்லிக் கேட்டிருக்கிறேன்.

சென்னை–17 குயிலி ராஜேசுவரி

● இசை விழா சிறப்பிதழா துணுக்குச் சிறப்பிதழா இந்த இதழில் 32 நகைச்சுவைத் துணுக்குகளும் ('பீஜி'யையும், 'ஹாஸ்ய ஸ்வரங்களை'யும் சேர்த்து) 10 செய்தித் துணுக்குகளும் இடம் பெற்றிருந்தனவே!

விருத்தாசலம் கபில்தாசன்

● 'ஹாஸ்ய ஸ்வரங்கள்' கடைசிப் பக்கங்களில் வாசிக்கப்பட்டாலும் தரத்தில் முதல் தரம்.

மாயூரம் என். ஞானஸ்கந்தன்

● 'காமான் மிஸ்டர் ஸ்டிரேஞ்' தலையங்கம் சரியான அடி சார்! அது மட்டுமல்ல; சற்று யோசிக்கவும் வைத்தது. கடைசியில் ஒரு வரி எழுதியிருக்கிறீர்களே, ''மர்ம நாவலிலாவது குற்றவாளிகளைப் போலீசார் பிடித்துவிடட்டும்'' என்று. அது ஒன்றே போதும், இனி அவர்கள் விழிப்புடன் இருக்க.

சென்னை–4 கி.சு.எ. சங்கர்

● 'நரி இடம் போனால் தேவலையா வலம் போனால் தேவலையா' என்றாலும். 'மேலே விழுந்து பிடுங்காத போனால் தேவலை!' என்றாலும் பதிலுக்கு. அதுபோல் போலீஸ்காரர்கள் திருடர்களைப் பிடிக்காமல் போகட்டும் பிடிக்கட்டும்—கவலையில்லை. அவர்களிடம் 'லஞ்சம்' வாங்கிக் கொண்டு திருடனுக்குத் துணை போகாதிருந்தால் — ரொம்ப நல்லது.

பாநூர் சு. எஸ். ரங்கநாதன்

● பெரிய பெரிய கொலை கொள்ளைகளைப் பிடிக்காததால் பெயரிழந்து விட்டது தமிழக போலீஸ் என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். குட்டிக் குட்டி குற்றங்களைக் கூடக் 'கண்டுக்காம' இருப்பதால்தான் என்பது என் கருத்து. 12 குழந்தைகளைப் பள்ளிக்கு இட்டுச் செல்லும் சைக்கிள் ரிக்ஷா பல போலீஸ் பீட்களைத் தாண்டித்தான் போகிறது. விபத்து நேர்ந்தால்...! பெரியவர்களுக்கான 'ஏ' படம் முழுக்க முழுக்கச் சிறுவர்களால் ஆராதிக்கப்படுகின்றன!

பஸ்களில் 'புட் போர்டு' வரை பயணிகள்! புட் போர்ட் இல்லாத பஸ் கண்டு பிடித்தாலும் கண்டு பிடிப்பார்கள். இருக்கிற ரூல்படி அளவான பயணிகளுடன் பஸ் ஓடாது. இன்னும் ஆயிரம்! யாரிடம் போய் அழ?

கம்பரசம்பேட்டை பு.ஆர். பத்மா

● ஸ்டிரேஞ்சைப் பற்றித் தங்களின் தலையங்கத்தைப் படித்ததும் மனம் பதறிப் போனேன். இருபதாண்டு காலம் ஆட்சி செய்த காங்கிரஸ் ஆட்சியில்தான் தமிழகப் போலீஸாரின் திறமையான நிர்வாகம் கண்டு மற்ற எல்லா மாநிலங்களும் பாராட்டி வந்தன. அதற்குப் பின்னர் தலையெடுத்த ''தமிழகத் தலைவர்களினால்தான்'' கடமை உணர்வுள்ள, நியாய உணர்வுள்ள மனச்சாட்சியுள்ள நல்ல உள்ளங்கள் கூட மாற்றப்பட்டு, போலீஸின் நிர்வாகம் சீர்குலைவு ஏற்பட்டது என்பதனை எவரும் மறுக்க முடியாது.

தூத்துக்குடி-2 தேவதாஸ்

● கல்கியில் என் 'அடிமைகள்' விமரிசனத்தில் விபரீத உறவு ஒன்று பற்றிச் சொல்லும் போது விமரிசகர் அவர்களை அண்ணன், தம்பி மனைவியாகத் தவறாக எழுதியிருக்கிறார். கதையில் அப்படி இல்லை. குற்றம் புரிபவர் பெரியப்பா. அதைவிட நான் அழுத்தம் தர விரும்பியது அந்த வயசு வித்தியாசத்தைத்தான். அதில் உள்ள அதிர்ச்சியைத்தான்.

பெங்களூர் சுஜாதா

● நான் ஜோதிடர் அல்ல. இருப்பினும் ஒரு கடுகு பதில் என்னை வருந்தச் செய்கிறது. சென்ற கல்கி இதழில் வாழ்வில் நம்பிக்கை இல்லாதவர்கள்தான் ஜோதிடம் பார்ப்பார்கள்'' என்று அறிவிலும் 'கடுகு' ஆகிப் பதில் தந்துவிட்டாரே! தயவுசெய்து இனி எந்த உயர் கலையையும் தாழ்த்திப் பதில் தராதீர்கள். ஜோதிடக் கலை விஞ்ஞானம் போன்றது. சில போலிகளால் அதன் பெயர் கெட்டுவிட்டது. அதுதான் உண்மை.

மதுரை-1 கலைக்கண்ணன்

● புஷ்பா தங்கதுரை தொடர்கதை அறிவிப்பு நெஞ்சத்தில் அச்சத்தை எழுப்பியுள்ளது. உங்களுக்குக் கோடி புண்ணியம் சேரும். தயவுசெய்து செக்ஸ் மசாலா கல்கியில் வேண்டாம், ஸார்.

திருவாரூர் ஆண்டாள் வரதராஜன்

# யாருக்கு ஓட்டு?



“இரண்யாய நம: நாமத்தை விட ‘‘இந்திராய நம:’’ நாமம் மேலோங்கியது. ஜனநாயகத்தை, சுதந்திரத்தை, சட்டத்தை, நீதியை, தியாகிகளை, பாரத மக்களை அவமதித்த இந்திரா கூட்டமைப்புக்கு வோட்டு கிடையாது.

இனம் இனத்தோடு சேரும் என்பதைப் போல், தி.மு.க. இந்திரா காங்கிரஸ் இரு அணியும் ஊழல் குற்றம் சாட்டப்பட்டு விசாரணையில் இருப்பவை. எந்தப் பஞ்சமா பாதகச் செயல்களையும் துணிந்து செய்யும் சரப் பசை இல்லாத இருதயத்தைப் பெற்றவர்கள். ஆகவே இந்த அணி பதவிக்கு வரவேண்டாம்.

ஜனதா பதவிக்கு வந்து மக்களின் சுதந்திரத்தைத் திரும்ப வழங்கியதுடன் முன்னேற்றகரமான பல நல்ல திட்டங்களையும் அமல் படுத்தியது. இன்னும் பல நல்ல திட்டங்களை விரைவாகச்செயல் படுத்தியிருக்க முடியும். அதற்குள் தேச நலனை மறந்து சுயநலம், பொறாமை, தான் என்கிற அகம்பாவம், பேராசை, துரோகம், வஞ்சகம் என்கிற துர்க்குணங்கள் லோகதளத் தலைவர்கள் ஆகியோரின் கூண்டுக்குள் புகுந்து எதையும் செயல்படுத்த முடியாது ஆட்சியே கவிழ்ந்து விட்டது.

கட்சி மாறுதல் பீடைக்கு வலுவான பீடம் அமைத்தவரே சரண் சிங்தான். இதே நோய் 12 ஆண்டுகளுக்கு முன் அவரால் உத்தரப்பிரதேசத்தில் தொடங்கி வைக்கப்பட்டது.

கட்சி மாறுவதால் செல்வம், சமூகத்தில் மரியாதை, மதிப்பு, மந்திரி பதவியும் (தீவிரமாகக் கட்சி மாறுபவருக்கு) கிடைக்கிறது என்பதால் ஒழுக்கக் கேட்டின் உறைவிடமான கட்சி மாறுதலை, கூச்சமின்றித் தைரியமாகச் செய்கிறார்கள்.

இந்தப் போக்கு நீடித்தால் ஜனநாயகம் அழிந்து சர்வாதிகாரத்தில் கொண்டு போய் விடும். நாட்டில் நல்ல அம்சங்கள் எல்லாமே கெடும்.

ஜனதா ஆட்சிக்கு வந்தால் ‘‘கட்சி மாறல் தடைச்சட்டம்’’ கொண்டு வருவதாகக் கூறுகிறது. நிச்சயம் கொண்டு வரும். (மற்றக் கட்சிகள் ஏதும் சொல்லவில்லை).

ஜனதா செய்த, செய்யவிருக்கிற நற்செயலுக்கும் அதன் நாணயத்துக்கும் வாக்களிப்போம்.

பெட்ரோலை ஊற்றி நெருப்பு வைத்துக் கொள்வதைப் போன்றது இந்திரா கூட்டமைப்புக்கு வோட்டளிப்பது.

விஷ மருந்தை உள்ளுக்குள் சாப்பிடுவதைப் போன்றது—லோக தளம் கூட்டமைப்புக்கு வோட்டளிப்பது.

விருந்து சாப்பாடு அல்ல எனினும் மோர் சாதம் சாப்பிடுவதைப் போன்றது ஜனதாவுக்கு வோட்டளிப்பது.

**பி.பி. சம்பத்**

நம் நாடு சுதந்திரம் பெற்றதிலிருந்து இதுவரையில் விவசாயிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் உரிய பங்கு இன்னும் பிரிக்கப்படவேயில்லை. நாளுக்கு நாள் விலைவாசி உயர்வு, வேலையில்லாதோர் எண்ணிக்கை உயர்வு, லஞ்ச லாவண்யத்தின் தொகையில் உயர்வு, பின்தங்கிய மக்கள் — வாழ்வில் வளமாக இருப்பவர்கள் வதைக்கிற அட்டூழியங்களின் உயர்வு இது போன்ற தவறான பாதையில் நம் நாடு வளர்ந்து வருகிறது.

எனது வோட்டை லோகதளத்துக்குத்தான் அளிக்க வேண்டும் என்று முடிவு செய்துவிட்டேன். இதற்கு நான்கு காரணங்கள் முக்கியமானவை.

1. வட இந்திய மாநிலங்களில் உள்ள விவசாயிகளின் ஆதரவு லோக தளத்துக்கு அபரிமிதமாக இருக்கிறது.

2. லோக தளம் பொருளாதாரத்தில் பிற்பட்டோர் நலத்தில் அக்கறை காட்டி வருகிறது.

3. இடதுசாரிகளின் ஆதரவு லோக தளத்துக்கு உண்டு.

4. எதேச்சாதிகாரத்தையும், சாதி—மத மாச்சரியங்களையும் எதிர்க்கும் கொள்கையை லோக தளம் பின்பற்றுகிறது.

மேலும் பிரதமர் சரண் சிங் காந்தியவாதி. சொல்லுக்கும் செயலுக்கும் இடைவெளி அதிகம் இல்லாதவர். நேர்மையான ஒரு தேசியத் தலைவர். விவசாயியின் மகன். ''உழுதுண்டு வாழ்வாரே வாழ்வர் — மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்'' என்பதே அவரது அரசியல் நெறி. அவருக்கே எனது வோட்டு!

**ஜெய நாராயணன்**

தவறுகள் நடந்தன. அவை தவறுகளே 'அல்ல என்று இந்திரா அம்மையார் பிடிவாதம் பிடிக்கவில்லை. மாறாக மன்னிப்புக் கேட்டார்.

அவருடைய சமீபத்திய பேச்சிலிருந்து ஒரு பகுதியை உங்கள் கவனத்துக்கு வைக்கிறேன். 'நாங்கள் கடந்த காலத்தில் பல தவறுகள் செய்திருக்கிறோம். அந்தத் தவறுகளைச் செய்த பிறகு, அதை உணர்ந்து, தவறுகள் நடந்துவிட்டன என்று அந்தத் தவறுகளில் பாதிக்கப்பட்டவர்களுக்கு எங்களது மன்னிப்பையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

'நாங்களும் மனிதர்கள்தாம். மனித சுபாவம் என்பது தவறுகளைச் செய்யக் கூடியதுதான். மிகப் பெரிய காரியங்களைச் செய்யும்போதுதான் தவறுகள் ஏற்படுகின்றன. மிக உயர்ந்த மலைமீது ஏறும்போதுதான் சில சமயங்களில் வழுக்கி விழ நேரிடுகிறது. கீழே விழுவதோ, தவறுகளைச் செய்வதோ கூடப் பெரிதல்ல. செய்த தவறுகளை மனிதன் பிறகு மாற்றிக் கொள்கிறானா? தவறுகளின் விளைவை அறிந்து மீண்டும் அந்தப் பெரிய காரியங்களைச் செய்யும்போது கவனமாக உயர்ந்த மலையில் ஏற மனிதன் முயற்சி செய்கிறானா என்றுதான் மக்கள் பார்க்க வேண்டும்.

இனி எதிர் வரிசையில் பார்ப்போம்.

எங்கும் பொருளாதாரச் சீர்கேடு, தங்கத்தின் விலை விண்ணைத் தொட்டுவிட்ட அவலம், பல பகுதிகளில் பஞ்சம், தொழிலாளர் போராட்டம், மில்கள் கதவடைப்பு, நிலக்கரி பற்றாக்குறை, நாகா — மிஜோ மணிப்பூர் பூசல்கள், போலீசாரே போராடுகின்ற நிலைமை, தொழிற் சங்கங்களில் கட்டுப்பாடின்மை, கம்யூனிஸ்டுகளின் கட்டவிழ்ப்பு வழிப்பறி, கொள்ளை, குடியிருப்பு கோயில்களில் நிர்ப்பந்தம் — ஆஹா! என்னே இரண்டரை ஆண்டு கால சாதனை!

இவ்வளவு தவறுகள் நடந்திருக்கின்றனவே ஏதாவது வழிமுறை கண்டார்களா? இல்லை. மனம் வருந்தினார்களா? மன்னிப்புக் கேட்டார்களா? இல்லை. ஆனால் ஓட்டுக் கேட்க வருவார்களா? ஆமாம். வருவார்கள். மக்கள் இவர்களை நம்பப் போகிறார்களா?

நான் நம்பவில்லை.

**ஏ. ராமலிங்கம்**



''உண்டியல் குலுக்கிட்டு வந்தவர்களில் ஒருவர் திரும்பவில்லை. அவரை உண்டியும் கையுமாகப் பிடித்துத் தருபவர்களுக்குப் பரிசளிக்கப்படும்!''

இந்தியாவின் அடுத்த பிரதமராக ஒரு ஹரிஜனைத்தான் ஏற்படுத்த வேண்டும் என்பதைத் தாரக மந்திரமாகச் சொல்லிக்கொண்டிருக்கும் திரு மொரார்ஜியின் ஜனதா கட்சிக்கு அன்றி வேறு எந்தக் கட்சிக்கு நான் வோட்டுப் போடுவேன்?

சமீப கால அரசியல் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நாம் கவனித்தோமானால் நமக்குப் பல உண்மைகள் புலப்படும். மறைந்துபோன 'லோக் நாயக்' திரு ஜெயப்பிரகாஷ் நாராயணனின் தலைமையில் காந்தி சமாதியில் உறுதிமொழி எடுத்துக்கொண்ட ஜனதாகாரர்களில் இன்றைய ஜனதாவில் உள்ளவர்கள்தான் உண்மையான ஜனதாக்காரர்கள் என்று சொன்னால் அது மிகையாகாது. 'பதவி ஆசை' பிடித்தவர்கள் யார் என்பதை மிகத் தெள்ளத் தெளிவாகப் பொதுமக்கள் அறிந்து கொண்டனர். எனவே அப்படிப் பதவி ஆசை பிடித்தவர்களுக்கு (லோக் தளம்—காங்கிரஸ் கூட்டணி) என்னுடைய வோட்டு கிடையாது.

அடுத்து வருவது அம்மையாரின் கூட்டணி. ''இனம் இனத்தோடு சேரும்'' என்பது நாம் அறிந்த ஒன்று. 'எமர்ஜென்சி' என்ற ஒன்றை அமல்படுத்தி இந்தியாவைச்சீர்குலைத்து, தாம் சுகபோகமாக வாழவும், 'ஏக சக்கரவர்த்தினியாக' வாழவும், தமக்குப் பின்பு தம்முடைய 'இளவரசன்' சஞ்சய் அரியணை ஏறவேண்டும் என்பதற்காகவும் நாட்டின் நலனை உதறித் தள்ளி, ஆயிரக் கணக்கான மக்களைக் கொடுமைப்படுத்திய இந்திராவுக்கா என் வோட்டு? ஒருகாலும் கிடையாது.

**என். ரங்கசாமி**

சரண்சிங் 'பால் போன்ற' கைசுத்தம் உள்ளவர் என்பது எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மை. லஞ்ச லாவண்யம் அவரது முதல் எதிரி. ராஜாஜியைப் போல! எந்தச் சூழ்நிலையில்? அரசியல்வாதிகள் கைசுத்தமாய் இருப்பது அவ்வளவு ஒன்றும் சாத்தியமல்ல— அவசியமுமல்ல என்று பரவலாய்ப் பொதுமக்களை நம்ப வைத்துக்கொண்டிருக்கும் இன்றைய சூழலில்! ஆகார வசதி இல்லாதவன் சாப்பிடாவிட்டால் பட்டினி. ஆகார வசதி உள்ளவன் சாப்பிடாவிட்டால்தான் உண்ணாநோன்பு! லஞ்சம் மலிந்த




''மதிய வேளைகளில் டாக்சி ஆட்டோ தேடிப் போக வேண்டிய அவசியம் ஏற்பட்டால் கையில் ஆறு அடுக்கு கேரியர் நிறைய சாப்பாடு கொண்டு செல்லவும். ஏனெனில் மதிய வேளைகளில் நாம் அழைக்கும்போது, 'சாப்பிடப் போறேன் ஸார்' என்று சொல்லும் ஆட்டோ, டாக்சி டிரைவர்களிடம் உடனே டிபன் கேரியரை நீட்டி அவர்களை மடக்கி விடலாம்!''

இன்றைய அரசியலில் லஞ்சம் வெறுக்கும் நோன்பை சரண்சிங் மேற்கொண்டிருக்கும் ஒரு காரணமே போதும் அவர் பிரதமராவதை நான் ஆதரிப்பதற்கு!

இவர் திறமைசாலியா என்று நாம் இப்போது விவாதிக்கப் புகுந்தால் மொரார்ஜியின் அறிவைச் சந்தேகிப்பதாக ஆகும். முற்றிலும் திறமை உள்ளவர் என்பதால் மட்டுமே உள் துறையை அவரிடம் தேசாய் விட்டு வைத்தார். இந்தியாவின் பெரும் மாநிலமான யு. பி. முதல்வராய் இருந்துவிட்டால் பாதி இந்தியாவை ஆண்ட மாதிரி என்பார்கள். அந்தத் தகுதியும் உள்ளவர் சரண்சிங்.

திட்டங்கள் ஏதும் செயல்படுத்த யோக்கியதை உள்ளவர்தானா இவர் என்று கேட்கலாம். இருபது வருடங்களுக்கு மேலாக நேருவுடன் ராஜாஜி போன்று தர்க்கம் செய்து பிரும்மாண்ட திட்டங்களுக்கு எதிரியாயும் கிராம வளர்ச்சியில் பெரும் நாட்டம் உள்ளவர் என்பதைப் பலரும் ஏற்றுக் கொள்ளும் வகையிலும் வளர்ந்து வந்த தலைவராவார். நேருவின் ஜனநாயக சோஷலிஸம் சூடான ஐஸ்கிரீம் என்று விவரம் அறிந்தவர்கள் கூறுவார்கள். விவரம் அறியாதவர்கள் அனுபவித்துப் புரிந்து கொண்டிருப்பார்கள் இந்த முப்பது ஆண்டுகளில்! காந்தியத் திட்டங்கள் நிறைவேறத் தாமே நாட்டின் பிரதமராவதைத் தவிர வேறு வழியில்லை என்று உணர்ந்த பின்னர் அந்த இலக்கை விரும்பிச் செயல்பட சரண்சிங் கர்மவீரர்தான் என்பதைப் புரிந்து கொள்ளலாம். காகிதப் பூ சோஷலிசம் போதும், காந்தி விரும்பிய கிராம ராஜ்யம் இனியாவது உருவாகட்டும் என்று விரும்பும் நான் சரண்சிங் பிரதமராவதையே விரும்புகிறேன்.

**என். பானு**

**மி**கத் தீவிரமாய் 1977ல் ஜனதாவை ஆதரித்தவன் நான். அன்றைய நிலையில் பிரதமரான இந்திராவும் அவரது மகன் சஞ்சய் காந்தியும் நடந்துகொண்ட முறையும்—நடத்திய ஆட்சி முறையையும் அனைவரும் அறிவோம். அதனால் பாதிக்கப்பட்டோரில் நானும் ஒருவன். இதனாலேயே ஜனதா ஆட்சி அமைந்திட ''அணிலாய்'' பணியாற்றினேன்.

ஆட்சியும் அமைந்தது. சாதனைகள் என்ன வென்று எண்ணிப் பார்த்ததில் மிசாக் கைதிகளை விடுவித்தல், பேச்சுரிமை—எழுத்துரிமை மீட்டுத் தரல் போன்ற செயல்களைச் செய்து ஏறக் குறைய இரண்டாவது சுதந்திரம் பெற்றோம் என்கிற சாதனைதான்!

ஆனால் அதன் பின்னர் பாரத நாட்டில் எங்கும் பாரதப்போர்களாய்ப் பல அங்கங்கே நடக்கலாயின. எதிலும் ஓர் ஒழுங்கற்ற முறை, கேட்பாரற்ற நிலை. கொலை-கொள்ளை கொடுமைகள் — ஏற்றத் தாழ்வுகள். எதிலும் தெளிவற்ற போக்கு. கொள்கையற்ற முரண்பாடுகள். இது தொடர வேண்டுமா? இதற்குப் பெயரா ஜனநாயகம்? ஐயகோ! வேண்டாமே இதுபோன்ற ஜனநாயகம் எங்களுக்கு!

''கடந்த காலத் தவறுகள் இனியும் நடைபெறாது; நடைபெறவும் அனுமதிக்க மாட்டேன். நடந்த தவறுகளுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்'' என்கிற இந்திரா அம்மையாரால்தான் இன்றைய தினம் ஒரு நிலையான அரசை அமைக்க முடியும்.

**ப. மூர்த்தி**

**கா**ய்கறிக் கடையில் கத்தரிக்காய் வாங்கப் போகிறோம். கத்தரிக்காய் அழுகலாக இருக்கிறது என்று வாங்காமலே வந்துவிடுவதில்லை; இருப்பதில் அதிக அழுகலில்லாததை வாங்கி வருகிறோம். கடலில் அலை இருக்கிறது என்று குளிக்காமல் வந்துவிடுவதில்லை. அலைகள் குறைவாக இருக்கும் பகுதியில் குளிக்கிறோம். இந்த நிலைகள் இன்றைய அரசியலுக்குப் பொருந்தும்.

இன்று நிலவும் குழப்பமான அரசியலில் அநாகரிகமான பதவிப் போட்டியில், தற்காலிக நாற்காலி லாபங்களுக்காக நடக்கும் காட்டுமிராண்டிச் சண்டையில் குறைந்த குழப்பமுள்ள, அதிக நாகரிகமுள்ள கட்சி ஜனதா என்பதே என் முடிவு.

ஜனதாக் கட்சிக்கு நீங்கள் ஓட்டுப் போடுவதன் மூலம்:

காந்தி கண்ட கனவான ''ஒரு ஹரிஜன் பிரதமர்'' என்பதை நனவாக்கும் பணியில் ஈடுபடுகிறீர்கள்.

ஊழல் கூட்டணியான, சந்தர்ப்பவாதக் கூட்டணியான, இந்திரா கூட்டணிக்குச் சவுக்கடி தருகிறீர்கள்!

வேலைவாய்ப்புத் திட்டம், ஊழலற்ற நல்லாட்சி, ஜனநாயகப் பற்று, மதுவிலக்குக் கொள்கை போன்ற பல நியாயமான கொள்கைகளில் பொதுக் கருத்துக் கொண்ட ஜனதா அ.தி.மு.க. கூட்டணியைப் பலப்படுத்தின, நியாயப்படுத்தின புண்ணியத்துக்கு ஆளாவீர்கள்!

லோகதளத் தலைவர்கள் போன்ற பச்சோந்திகள், ஒட்டுண்ணிகள் இல்லாத ஜனதா என்ற ஆலமரம் தழைத்து வளரத் தண்ணீர் வார்த்தவர் ஆவீர்கள்!

**ஆ. கண்ணன்**

கிறிஸ்துமஸ்
நற்செய்திகேளீர்!
கிடைத்திடும்
நற்பரிசு !!





# வாங்கிடுவீர்
# தமிழ் நாடு அரசு
# பரிசுச் சீட்டு

குலுக்கல் நாள் :
8-1-1980
பரிசுச் சீட்டின்
விலை ரூ.
1 மட்டுமே.

ஒவ்வொரு வரிசையிலும் இரண்டு முதற் பரிசுகள்
ஒவ்வொன்றும் ரூபாய்

# 50,000

3 இரண்டாவது பரிசுகள்
ஒவ்வொன்றும் ரூ. **10,000**
மேலும் ஆயிரக்கணக்கான
இதர பரிசுகள்.



இயக்குநர்
தமிழ் நாடு பரிசுச் சீட்டுத் திட்டம்
அரசினர் தோட்டம், சென்னை-600 002.

ELEGANT




# கல்கி

1979 டிசம்பர் 30
சித்தார்த்தி மார்கழி 15
மலர்: 38 இதழ்: 22




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# கெரசினுக்கு வோட்டு; சர்க்கரைக்கு வாக்கு!

**யா**ருக்கு வோட்டுப் போடுவது என்கிற கவலையை விடச் சர்க்கரையும் கெரசினும் கிடைக்க வேண்டுமே என்ற கவலைதான் வாக்காளர்களுக்கு அதிகமாக இருப்பதாகத் தினசரிகள் சில அனுமானிக்கின்றன. இது உண்மையெனில் அதைவிட விசனிக்கத்தக்க விஷயம் வேறு இருக்க முடியாது. வாக்குரிமை பெற்றுள்ள ஒவ்வொரு பாரதப் பிரஜையும் அந்த உரிமையைத் தவறாமல் பிரயோகிக்க வேண்டும். அதன் மூலம் சர்க்கரை, கெரசின் பிரச்னை மட்டுமல்ல, வேறு பல பிரச்னைகளும் தீரத் தங்களுக்குத் தாங்களே உதவிக் கொள்ள வேண்டும்.

மக்களின் பிரச்னைகள் எவ்வாறு தீரும்? சர்வாதிகாரம் செலுத்தி மக்களை அச்சுறுத்தி எல்லாக் காரியங்களையும் சாதிக்கலாம். அப்போது பிரச்னைகள் தீராவிடினும் தீர்ந்து விட்டது போல் ஒரு மாயைத் தோற்றத்தை ஏற்படுத்தலாம். அல்லது, பூரண சுதந்திரத்தை மக்களுக்கு அளித்து, கடமை உணர்வையும் பொறுப்புணர்ச்சியையும் ஊட்டி, தேசபக்தியை வளர்த்து, நல்ல பல திட்டங்களை வகுத்து, பிரச்னைகளை மக்கள் தங்களுக்குத் தாங்களே தீர்த்துக் கொள்ள அவர்களுக்கு உதவலாம்.

முதலிற் சொன்ன முறையை இந்திரா காந்தி பின்பற்றிப் பார்த்துப் படுதோல்வி அடைந்து விட்டார். 'இனி அந்த வழிக்கே நான் போகமாட்டேன்' என்று அவர் கூட்டத்துக்குக் கூட்டம் பிரசாரம் செய்த போதிலும் இது சீதை வேஷத்தில் இருக்கும் சூர்ப்பனகையே என்பதை மக்கள் அறிவார்கள். அலகாபாத் நீதி மன்றத்தில் சொன்ன பொய்க்குப் பிறகு தொடர்கதையாக அவர் கூறிவரும் புளுகுகளில் இதுவும் ஒன்று என்றே கருதுவார்கள் – கருதவேண்டும்; ஏமாந்து விடக்கூடாது.

ஜனதா பதவிக்கு வந்த பிறகு முதல் கட்டமாக மக்கள் சுதந்திரங்கள் அனைத்தையும் திரும்ப அவர்களுக்கு வழங்கியது. அடுத்த கட்டமாக நிர்மாணப் பணிகளில் இறங்கியது. ஆனால் அந்த அடுத்த கட்டத்தைத் திறம்பட அமல் படுத்த முடியாதபடிக்குக் கட்சியிலும் ஆட்சியிலும் இருந்த குழப்பவாதிகள் குறுக்கிட்டார்கள். நல்லவேளை, இப்போது அந்தக் குழப்பவாதிகள் தனியே பிரிந்து போய் லோக தளம் என்ற தனிக்கட்சி அமைத்து விட்டார்கள். குழப்பவாதிகள் மிகுந்த லோகதளம் இன்னமும் குழம்பிக்கொண்டு தான் இருக்கிறது என்பதை அவர்களது தேர்தல் அறிக்கையே நிரூபிக்கிறது. வேலையில்லாத் திண்டாட்டத்தையொழிக்க டெலிவிஷன், கார், ஏர்கண்டிஷன் சாதனம் போன்ற பலவற்றின் உற்பத்திக்கே தடை விதிப்பதுதானா வழி? இதனால் இருக்கிற வேலை வாய்ப்புக்களும் குறையுமேயன்றி அதிகரிக்கவா செய்யும்? சரண்சிங் சென்ற முறை கொண்டு வந்தது போன்று இன்னும் ஒரு பட்ஜெட் வந்தால் போதும், பிறகு தேசப் பொருளாதாரத்துக்குக் கதி மோட்சமே கிடையாது. சர்வநாசத்திலிருந்து அதனை மீட்கவே முடியாது.

எஞ்சியிருப்பது, குழப்பவாதிகள் வெளியேறிவிட தெளிந்த சிந்தனையுடன் விளங்கும் ஜனதாதான், ஜனதா தலைவர்களிடம் குறைகளே இல்லை என்று நாம் சாதிக்கத் தயாராக இல்லை. இந்தப் பத்திரிகையிலேயே பலமுறை ஜகஜீவன் ராமின் சில செயல்களும் அவருடன் இன்று கூட்டுச் சேர்ந்துள்ள எம். ஜி. ஆரின் சில காரியங்களும் கண்டனத்துக் குள்ளாகி இருக்கின்றன. அதனாலேயே இன்று அவர்களுக்கு ஆதரவு கொடுங்கள் என்று வாக்காளர்களை நாம் வேண்டும் போது அந்தச் சொல்லுக்கு மதிப்பு மிகுதி என்று கருதுகிறோம். நான்கு முக்கிய காரணங்களுக்காக ஜனதாவுக்கு நாம் வோட்டுப் போடவேண்டும்.

1. 77ல் பதவிக்கு வந்த ஜனதா தன் நிர்மாணத் திட்டங்களை அமல் படுத்த அதற்குப் போதிய அவகாசம் தரப்படவில்லை. இந்த வாய்ப்பை அவர்களுக்கு அளிக்க வாக்காளர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

2. வேறு எந்தக் கட்சியும் அறிவிக்காத கட்சி மாறல் தடை சட்டத்தை நிறைவேற்றுவதாக ஜனதா கூறுகிறது. இதன் மூலம் ஆரோக்கியமான அரசியல் நாட்டில் உருவாக வழி ஏற்படும்.

3. உலக நோக்கில் நாம் ஜனநாயகத்துக்குத் தகுதி உள்ளவர்களே என்பதை நிரூபித்தாக வேண்டும். சர்வாதிகாரிகளுக்கும் சந்தர்ப்பவாதிகளுக்கும், குழப்பவாதிகளுக்கும் பச்சோந்திகளுக்கும், லஞ்ச ஊழல் குற்றச் சாட்டுக்களுக்கு உள்ளாகி அவை நிரூபிக்கவும் பட்டதாக கமிஷன் தீர்ப்புப் பெற்றவர்களுக்கும், மக்களை ஏமாற்றி மோசடி செய்ததாகத் தீர்ப்புப் பெற்றவர்களுக்கும் நம்மை ஆள்வதற்குச் சந்தர்ப்பம் அளிக்கமாட்டோம் என்பதை அகில உலகுக்கும் நாம் உணர்த்தியாக வேண்டும்.

4. இவை எல்லாவற்றுக்கும் மேலாக ஆரம்பத்தில் நாம் குறிப்பிட்ட கெரசின் தட்டுப்பாடு, சர்க்கரைப் பஞ்சம் முதலிய பல தொல்லைகள் நீங்கவும், உற்பத்தியும் வேலைவாய்ப்பும் பெருகவும், பொருளாதாரம் செழிக்கவும், விலைவாசிகள் குறையவும் நாம் ஜனதா - அ. இ. அ. தி. மு. க. கூட்டணிக்கு வோட்டுப் போட்டேயாக வேண்டும்.






# வாஜ்பாய்

**X-RAY**

அகலமான முகம், ஒருவித நாணம் கலந்த சிறுபிள்ளைச்சிரிப்பு, வெளிப்படையான பேச்சு, கண்ணியமும், நேர்மையும் கலந்த குணவாரு, இலக்கியத் தரம் மிகுந்த வளமான நாவன்மை, பதவிக்கு 'ஆலாய்'ப் பறக்காமல் சில அடிப்படை நெறிகளினின்று வழுவாமல் செயல்படும் வாழ்க்கை — உத்தரப் பிரதேசத்தைச் சேர்ந்த 53 வயது பிரம்மச்சாரியான ஆட்டம்பெறாத வாஜ்பாயிக்கு இந்திய அரசியலில் ஒரு நல்ல எதிர்காலம் இருப்பதை 'கலர்' கண்ணாடி போடாமல் நோக்கும் எவரும் ஒப்புக்கொள்வார்.

மொரார்ஜி அரசுக்கு மிகப் பெரிய பலமாக விளங்கிய வாஜ்பாயியும் அவரது ஜனசங்க சகாக்களுமே கடைசியில் மிகப் பெரிய பலஹீனமாகி அரசு கவிழக் காரணமானது சமீபத்திய நிகழ்ச்சி.

தமது பதினைந்தாவது வயதிலேயே ஆர். எஸ். எஸ். இயக்கத்தில் சேர்ந்த வாஜ்பாய் 1942–43ம் ஆண்டு ஆர். எஸ். எஸ்.ஸில் இருந்ததோடு மட்டுமின்றி அதே சமயத்தில் இந்திய தேசிய காங்கிரஸிலும் அங்கத்தினராக இருந்தார் என்பது பலரும் அறியாத உண்மையாகும். அப்போது யாரும் ஆட்சேபிக்கவில்லை!

ஆர். எஸ். எஸ்.ஸின் அரசியல் அங்கமாக ஜனசங்கம் தோன்றின பிறகு அக்கட்சியில் அங்கத்தினராகித் தமது முப்பத்தியோராவது வயதில் பாராளு மன்றம் நுழைந்து தொடர்ந்து அங்கத்தினராக இருந்து வருகிறார். ஜனசங்கத்தின் தலைவர் ராம் தயாள் உபாத்தியாயா கொலை செய்யப்பட்டபோது, பல மூத்த தலைவர்கள் தலைமைப் பொறுப்பேற்கத் தயங்கியபோது துணிச்சலுடன் அப்பதவியை ஏற்றவர் வாஜ்பாய்!

நேருவைப் போலவே, இவரிடமும் மக்களுக்கு ஒரு கவர்ச்சி உள்ளது.

ஆர். எஸ். எஸ்.ஸின் 'ஹிந்து ராஷ்ட்ரா' கொள்கை மீது ஒரு தீவிரமான மனப்பிடிப்புக் கொண்டிருந்த இவரது மன நோக்கில் சமீபத்தில் சில மாற்றங்கள் நிகழ்ந்துள்ளதைக் காண முடிகிறது. காலத்துக்கு ஏற்ப ஆர். எஸ். எஸ்.ஸில் சில கொள்கை மாற்றங்கள் தேவை என எண்ணுகிறார்.

நினைத்ததை மறைக்காமல் வெளிப்படுத்தி அதற்குப் பிரதி பலனைத் தமது கட்சி சகாக்களின் தீவிர விமர்சனத்தை வாங்கிக் கட்டிக்கொள்ளும் வழக்கம் வாஜ்பாயிக்கு உண்டு.



பங்களா தேஷ் போர் சமயம் இந்திரா காந்தி செயல்பட்ட விதத்தைப் பாராட்டி இந்திராவைத் 'துர்க்கை'யாக வர்ணித்து அவருக்கு இவர் கடிதம் எழுதப் போக, 'வசிஷ்டர் வாயால் பிரமரிஷி' பட்டம் கிடைத்த மகிழ்ச்சியில் இந்திரா மூழ்கி, வந்தவர் போனவர்களிடமெல்லாம் அக்கடிதத்தைக் காட்டப்போய், வாஜ்பாய் தமது கட்சி மேலிடத்துக்கு விளக்கம் சொல்ல வேண்டிய நிர்ப்பந்தத்தில் முடிந்தது!

மொரார்ஜியையும் சரிக்கட்டி, ஜெகஜீவனைப் பிரதமராக்குவதற்கும் ஆதரவு அளித்து, முன்னாளைய சோஷலிஸ்டான சந்திர சேகருக்கும் முக்கியத்துவம் அளித்து, அவர்களைவிடத் தமக்கு மக்கள் பலம் அதிகமிருந்தும் அமைதியாகவும் அடக்கமாகவும் இவர் செயல்படுவதைக் காணும்போது மனிதருக்கு இன்றைய தினத்தை விட நாளைய தினத்தில் அதிக குறி இருப்பதை உணர முடிகிறது.

**பி. ரங்காயமி**

---



அமைச்சர் தேர்தல் கூட்டத்தில் பேசி முடித்தார். கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு ஒரு மூதாட்டி மேடையேறி அமைச்சருக்கு மாலையணிவிக்க ஒரே கரகோஷம்.

மூதாட்டியை அணைத்துக் கொண்டு, மாலையைக் கழற்றப் போன அமைச்சரை, ஐயோ! "மாலையைக் கழற்றாதீர்கள், அவர் வந்து பார்த்தால் எனக்குத்தான் ஆபத்து" என்று கூவ கூட்டத்தில் சலசலப்பு. அமைச்சர் விழித்தார். "யார் அந்த அவர்" என்று கேட்டார்.

"உங்களுக்கு மாலை அணிவித்தால் பத்து ரூபாய் தருவதாக வாக்களித்தாரே அவர்தான்" என்று மூதாட்டி கவலையுடன் கூற, கூட்டத்தில் சிரிப்புக்கு எல்லையே இல்லை. இரா. ஸ்ரீதர்

**வா**னத்தில் விடிவெள்ளி முளைத்து வெகு நேரம் ஆகியிருந்தது.

ஆனால் அவள் வாழ்க்கையில்?

அதிகாலையில் துயிலெழுந்து அரசலாற்றில் ஆசை தீர நீராடி விட்டு, துவைத்தெடுத்த துணிகள் தோளில் தவழ, ஈர ஆடை மென்மலர் மேனியைத் தழுவிக் கிடக்க, இடுப்பில் தண்ணீர்க் குடம் ஏந்தியவாறு அரச மரத்தடிப் பிள்ளையாரை மெய்ம்மறந்து தொழுது நிற்கும் அந்த அழகுச் சிலையின் கோரிக்கை என்னவாயிருக்கும்?

''இருள் கவிந்திருக்கும் என் எதிர்காலம். அதில் எப்போது விடிவெள்ளி உதிக்கும் சுவாமி?'' என்று கேட்டிருப்பாளோ?

ஈரம் கசிந்த கண்களைத் துடைத்துக் கொண்டு அப்பால் நகர்கிறாள் நிர்மலா.

வீட்டை நெருங்கி வந்து கொண்டிருந்தாள், நிர்மலா. பின்னால் மோட்டார் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தாள். ஜீப்!

வெகு வேகமாக வந்து கொண்டிருந்தது. கண் இமைக்கும் நேரத்துக்குள் மிக அருகில் நெருங்கி விட்டது. பக்கத்திலிருந்த பஞ்சாயத்துக் குழாயிலிருந்து வழிந்துகொண்டிருந்த தண்ணீர் ரோட்டில் பள்ளம் கட்டிக் கிடந்தது. அதை 'விருட்'டென்று தாண்டி அப்பால் அடியெடுத்து வைப்பதற்குள்!

'சளக்!'

தண்ணீரை அவள் மீது வாரி இறைத்து அபிஷேகம் செய்துவிட்டு அவளைக் கடந்து சிறிது அப்பால் கடந்து நின்றது ஜீப்.

அவள் முகத்தைப் பார்க்க வேண்டுமே! நெற்றிக் கண் இருந்திருந்தால் டிரைவரை நிர்த்தாட்சண்யமாய்ச் சுட்டெரித்திருப்பாள். நல்லவேளை! அது இல்லை.

வண்டியை ஓட்டி வந்தவர் மெல்ல இறங்கி வந்தார். தவறு செய்துவிட்ட உணர்வு அவரை நிறுத்தியிருக்க வேண்டும்.

''சாரி.''

''சாரியாவது, ஜாக்கெட்டாவது? ஏம்பா டிரைவர்; கொஞ்சனுச்சம் அறிவிருக்கா உனக்கு?.... மோட்டார் வண்டியிலே ஏறி உட்கார்ந்துட்டாப் போதுமே, பெரிய ஜில்லாக் கலெக்டர் துரைங்கிற நினைப்பு....வண்டியைப் பார்த்து ஓட்ட வேண்டாமா?...''

''மன்னிக்கணும்.''

''ரொம்ப நன்னாயிருக்கு. செய்யறதைச் செய்துட்டு மன்னிப்புக் கேட்டுண்டாப் போறுமா?''

''இப்ப நான் என்ன செய்யணும்?''

''செஞ்சது போறுது? இன்னும் வேறே செய்யணுமாக்கும்? வேணும்னு ஒண்ணு செய்..... நீ பண்ணின தப்புக்குப் பிராயச் சித்தமா அதோ அந்தப் பிள்ளையாருக்குப் பத்து தோப்புக்கரணம் போட்டுட்டுப் போ!''

குடத்தை எடுத்து மறுபடியும் இடையில் வைத்துக் கொண்டு விடுவிடென்று நடையைக் கட்டினாள் நிர்மலா. நடையில் கூட இத்தனை ஒயிலா? அன்னம் அதைப் பார்த்திருந்தால் கட்டாயம் அவளிடம் பிச்சை கேட்டிருக்கும்.

வீட்டு வாசற்படியில் நின்று திரும்பிப் பார்த்த நிர்மலாவின் கண்களில் ஊர்க்கோடிப் பிள்ளையார் சந்நிதியில் யாரோ தோப்புக்கரணம் போட்டுக் கொண்டு நிற்பது தெரிந்தது.

யாராயிருக்கும்?

சற்றுக் கூர்ந்து பார்த்தாள். டிரைவர்!

பொத்துக் கொண்டு வந்த சிரிப்பை அவளால் அடக்க முடியவில்லை.

**ஆ**லப்பாக்கம் கிராமத்துக்கு மங்கலம் சப் கலெக்டர் எஸ். எஸ். ராஜன் ஐ.ஏ.எஸ். திடீர் விஜயம் செய்தது பட்டாமணியம் தேசிகாச்சாரிக்கு ஆச்சரியமா யிருந்தது. முன்னறிவிப்பு எதுவுமில்லாமல் ஏது இந்த எதிர்பாராத வருகை?

கிராமச் சாவடியிலிருந்து டிரைவர்-கம்-டபேதார் ரங்கபாஷ்யம் நாயுடு அவர் வீட்டுக்கு வந்து, ''சப் கலெக்டர் துரை வந்திருக்கார். உங்களைக் கையோட அழைச்சாரச் சொன்னார்'' என்று கூப்பிட்டபோது, அவருக்கு ஒரு கணம் 'திக்'கென்றுவிட்டது. பரக்கப் பரக்க அங்கவஸ்திரத்தை எடுத்துப் போர்த்திக் கொண்டு பறந்தார்.

கிராமத்தில் தமுக்குப் போடப்பட்டது. ஊர்ப் பிரமுகர்களைக் கூட்டி விரிவான விசாரணை நடத்தினார் சப் கலெக்டர்.

'ஆலப்பாக்கம் அரிஜனங்களுக்குக் குடியிருப்பு மனை ஒப்படைப்பு செய்வதில் கண்டிக்கத்தக்க காலதாமதம் நேர்ந்துள்ளது. இந்த விஷயத்தில் ஜாதி இந்துக்கள் வேண்டுமென்றே இடர்கட்டை போடுகிறார்கள். அதிகாரிகள் அவர்களுக்குச் சாதகமாக இருக்கிறார்கள்' என்று கொடுக்கப்பட்ட புகார் மனு மீது அரசாணை அவசரமாகப் பறந்தது. தகவல் கோரி.... அதன் விளைவுதான் ஆலப்பாக்கம் கிராமத்துக்கு சப் கலெக்டரின் திடீர் விஜயம்.

சம்பந்தப்பட்ட இடங்களையெல்லாம் சுற்றிப் பார்த்துவிட்டு வந்துவிட்டார், விசாரணையின்போது ஊரார் ஒரே குரலில் பேசினார்கள். மந்தைவெளிப் புறம்போக்கைத் தரிசாக மாற்றி அரிஜனங்களுக்குக் குடியிருப்பு மனையாக ஒப்படை செய்வது கால்நடைகளைப் பெரிதும் பாதிக்கும். எனவே பொது நலனுக்கு இடையூறானது என்பது அவர்களது ஒருமித்த ஆட்சேபணை. பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சாட்சரம் அதில் விடாப் பிடியாய் நின்றார்.

மணியம் தேசிகாச்சாரியின் அபிப்பிராயத்தைக் கோரினார் சப் கலெக்டர். தேசிகாச்சாரி எதையும் பட்டவர்த்தனமாக — வெட்ட வெளிச்சமாகப் பேசக் கூடியவர். இந்த விஷயத்தில் அவர் கருத்து ஊராரின் கருத்துக்கு மாறுபட்டிருந்தது.

''கால்நடை மேய்ப்புக்குத் தனியே ஐந்து ஏக்கருக்கு மேலே புறம்போக்கு இருக்கிறது. அது போதும். இந்தக் குடிசை யில்லாத ஏழை அரிஜனங்களுக்கு மந்தைவெளிப் புறம்போக்கை ஒதுக்கிவிடுவதுதான் நியாயம்''

# காரில் வந்தவர்

ஜோஸப்

போட்டிக் கதை-15



என்று கூறினர். இது பஞ்சாயத்துக் தலைவர் பஞ்சாட்சரத்தைப் பெரிதும் பாதித்தது.

தேசிகாச்சாரியின் விளக்கம் வளர்ந்து கொண்டு போயிற்று. சப் கலெக்டர் கைக்கடிகாரத்தைப் பார்த்தார்.

''மன்னிக்கணும். நான் பாட்டுக்குப் பேசிக் கொண்டே போறேனே. சாப்பாட்டு டயம் கடந்துண்டிருக்கு. நான் உடனேயே போய் என் வீட்டிலேயிருந்து கேரியர்லே சாப்பாடு கொடுத்தனுப்பறேனே? அவ்விடத்து உத்தரவு என்னவோ?''

''சாப்பாடா? உங்க வீட்டிலிருந்தா?''

''பின்னே? இந்தக் குக் கிராமத்திலே என்ன ஹோட்டலா இருக்கு? கிராமத்துக்கு வர்ற அதிகாரிங்களுக்கு சாப்பாடு சௌகரியங்களைக் கவனிக்க வேண்டியது கிராம மணியக்காரரோட கடமைன்னு வில்லேஜ் ஆபீஸர் மான்யுவல்லேயே சட்டம் போட்டு வச்சிருக்கா.''



டபேதார் ரங்கபாஷ்யம் நாயுடு தேசிகாச்சாரியைக் கூப்பிட்டுச் சொன்னார்.

"ஏன் சுவாமிகளே, கேரியரிலே சாப்பாட்டைச் சாவடிக்குக் கொண்டாறதைவிட சாமி வீட்டுக்கே போயிட்டா சல்லிசா இருக்கும். தொரை கூடா திருப்தியாச் சாப்பிடறதுக்கும் வசதியாயிருக்கும்."

"அதுவும் சரிதான். ஆனா அதிகாரி என்ன சொல்வாரோ? எங்க வீடு ரொம்ப எட்டத்திலே இருக்கே."

"அவர் என்ன நடந்தா வரப் போறார்? வண்டி இருக்கவே இருக்கு."

சற்று நேரத்தில் ஜீப் மணியக்காரர் வீட்டை நோக்கிச் சென்றது.

தலை கவிழ்ந்தவாறு சாப்பாடு பரிமாற வந்த நிர்மலா ஏறிட்டுப் பார்ப்பதற்கும், இலையில் ஜலம் தெளித்து வழித்தெறிந்து விட்டு ராஜன் நிமிர்வதற்கும் சரியாயிருந்தது.

"நீங்கள்?"

"நானேதான்.... அசட்டு டிரைவர்!"— கேலியாகக் குத்திக் காட்டவில்லை ராஜன். வேடிக்கையாகத்தான் குறிப்பிட்டார். வகிப்பது உயர் பதவியாயிருந்தால் என்ன? இளமையின் இடக்குப் பேச்சும் குறும்புத்தனமும் எங்கே போய்விடும்? இயல்புதானே?

பரிவோடு பரிமாறினாள் நிர்மலா. பாசமும் அதில் மேலோங்கி நின்றதை ராஜன் உணரத் தவறவில்லை. வயிறார உணவருந்தினார். அதோடு பல விவரங்களையும் 'நாசூக்'காகக் கேட்டுக் கிரகித்துக் கொண்டார். அவைகளில் முக்கியமானது 'நிர்மலாவுக்கு வரன் தேடும் படலத்தில் மும்முரமாய் முனைந்திருக்கிறார் தேசிகாச்சாரி. அவளுக்கு நகை நட்டு, சீர் செனத்திக்கு ஆகக் கூடிய செலவைச் சரிக்கட்ட அவரது பிதிரார்ஜிதச் சொத்தாயிருந்த ஒரே காணி நஞ்சை நிலத்தையும் வேங்கடாசலக் கவுண்டரிடம் விலை பேசி முடித்திருக்கிறார்.



"அடியே செங்கமலம்! சீக்கிரம் ஓடியா! எதிர் வீட்டு, டி. வி. யில், ஒலியும் ஒளியும் ஆரம்பமாச்சுது!"

உணவருந்தி முடித்துவிட்டுப் புறப்பட வெளி வாசலருகே வந்த ராஜனது செவிகளில் அறைக்குள்ளிருந்து ஜன்னல் வழியாகக் காற்றலையில் மிதந்து வந்த பெண் குரலின் விசும்பல் ஒலி மெல்ல வந்து மோதியது.

நெஞ்சம் நெகிழத் திரும்பிப் பார்த்து விட்டு ஜீப்பை நோக்கி நடந்தார் ராஜன்.

கிராமச் சாவடியில் விசாரணை மீண்டும் தொடங்கியபோது அப்படி ஒரு திடீர்த் திருப்பம் நிகழுமென்று யாருமே எதிர்பார்க்கவில்லை. தேசிகாச்சாரிக்குப் பலத்த அதிர்ச்சியொன்று காத்திருந்தது.

சப் கலெக்டர் விசாரணைக்கு மறுபடியும் வந்து உட்கார்ந்ததும் உட்காராததுமாய் அவரிடம் புகார் மனு ஒன்று தரப்பட்டது.

அந்த மனுவை நீட்டியவர் வேங்கடாசலக் கவுண்டர். ஆனால் வேங்கடாசலக் கவுண்டரை முடுக்கி விட்டவர் பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சாட்சரம்.

உள்ளதை உடைத்துவிட்ட மணியக்காரர் மீது அதற்குள் பகைமை பாராட்டிப் பழி வாங்கிவிட்டார் பஞ்சாட்சரம்.

புகார் இதுதான்:

'வேங்கடாசலக் கவுண்டர் செலுத்த வேண்டியதிருந்த சர்க்கார் டிராக்டர் கடன் தவணைப் பாக்கி இரண்டாயிரத்து எழுநூற்றைம்பது ரூபாயை மணியக்காரர் அவரிடமிருந்து வசூல் செய்து ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டது. ஆனால் நாளது வரை அந்தப் பணம் சர்க்கார் கஜானாவில் இருசால் செய்யப்படவில்லை. மணியக்காரர் அந்தப் பணத்தைக் கையாடிவிட்டார்.'

மணியக்காரர் கையெழுத்திட்டுக் கொடுத்திருந்த சர்க்கார் அச்சு ரசீதை வேங்கடாசலக் கவுண்டர் சப் கலெக்டரிடம் ஆஜர்ப்படுத்தினார். கிராமத் தண்டல் கணக்குகளைத் தணிக்கை செய்தார் சப் கலெக்டர். தேசிகாச்சாரிக்குத் தமது புறமுதுகில் கூரிய குத்தீட்டி பாய்ந்தது போன்ற ஓர் உணர்வு.

புகார் உண்மைதான்.

பணம் கையாடப் பட்டிருந்தது.

புருவத்தை நெரித்துத் தேசிகாச்சாரியை ஏறிட்டுப் பார்த்தார் சப் கலெக்டர்.

மணியக்காரர் ஒன்றையும் மறைக்கவில்லை. மறைக்க விரும்பவில்லை. வெளிப்படையாகவே ஒப்புக்கொண்டார்.

"நான் வேங்கடாசலக் கவுண்டரண்டை பணம் வாங்கலே, அவர் கட்டிடுவார்னு நம்பி முன்கூட்டியே ரசீது போட்டுக் கொடுத்தேன். ஆனா அவர் நம்பிக்கை மோசம் பண்ணிட்டார் என்றெல்லாம் நான் வாதாடப் போறதில்லே. வாதாடினால் எனக்கு நிச்சயம் வெற்றி கிடைக்கும். ஆனால், எனக்கு அதிலே இஷ்டமில்லே. காரணம் பொய் சொல்லிப் பழக்கமில்லே."

தேசிகாச்சாரி கூறியதை அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்தார் சப் கலெக்டர்.

"நடந்தது இதுதான்: கடன் பாக்கிக்கு அவர் அன்னிக்குப் பணம் கட்டினார். வாஸ்தவம்தான். ஆனா என் நிலத்தை ஐயாயிரம்

ரூபாய் விலை பேசி, அன்று பணம் தருவதாக ஒப்புக் கொண்டிருந்த இதே வேங்கடாசலக் கவுண்டர், 'கடன் பாக்கியை இன்னிக்கு வரவு வச்சுடுங்க. உங்க பணத்தை நாளைக்குக் கரும்பு வித்துக் கட்டாயம் கட்டிடறேன்'னு கையடிச்சுச் சத்தியம் பண்ணினார். நம்பினேன். கடன் வசூல் பணத்தைக் கஜானாவிலே கட்டறதுக்கு அடுத்த நாள் தாலூகாவுக்குப் போறச்சே, தற்செயலா பேப்பர்லே ஒரு சேதி படிச்சேன், 'பவுன் விலை எல்லாம் எக்கச்சக்கமாய் விஷம் போல் ஏறிண்டிருக்கு' என்று. எனக்கொரு யோசனை தோணித்து. 'மங்கலம் வந்தது வந்தோம். தண்டபாணி பத்தர் வேறே கூடவே வந்துண்டிருக்கார். பொன் வேலை நுணுக்கம் தெரிஞ்சவர். ஒரு வேளை இது தெய்வ சங்கல்பமா யிருக்குமோ? குழந்தைக்கு நகை செய்ய இன்னைக்கு ஆர்டர் கொடுத்துட்டால்? கல்யாணத்துக்கு நிக்கற பொண்ணாச்சே. திடீர்னு வரன் குதிர்ந்துடலாமோன்னோ' இப்படி ஒரு சபலம்!

'என்ன பிரமாதம்? நாளைச்சே நம்ப பணம் வந்துடப் போறது. உடனே இருசால் பண்ணிட்டாப் போச்சு. மங்கலம் லக்ஷ்மி விலாஸ் ஜுவல்லரியிலே ஒரு ஜோடி வளையலுக்கும் நெக்லஸுக்கும் ஆர்டர் கொடுத்துட்டு அட்வான்ஸா இரண்டாயிரத்தைந்நூறு ரூபாயையும் செலுத்திட்டேன். ஆமா அந்தப் பணத்திலிருந்துதான். தப்புத்தான். இல்லேங்கலே. ஆனா விதி இப்படி விளையாடும்னு எனக்கு அப்போ தோணலே. வேங்கடாசலம் இப்படி ஒரேயடியா மோசம் பண்ணிடுவான்னு நான் நெனைக்கலே. இன்னு வரை அவன் எனக்குச் சேர வேண்டிய பணத்தைச் செலுத்தலே. எய்தவன் இருக்க அம்பை நொந்து என்ன பண்றது?''

பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சாட்சரம் குறுக்கிட்டுப் பேசினார். ''இதுக்கெல்லாம் ஒண்ணும் டாக்குமெண்டரி எவிடென்ஸ் ஒன்றும் கிடையாதுங்க. டிபென்ஸ் ஒண்ணும் எடுபடாது.''

பலமுறை கோர்ட் படி ஏறி இறங்கியவர். பல பேரைப் பழிவாங்கிப் பழக்கப்பட்டவர். அதனால் கோர்ட் பாஷையிலேயே பேசினார்.

''எவிடென்ஸ் இருக்கோ இல்லேயோ... உண்மை இதுதான். அப்புறம் தோரணை யோட இஷ்டம்.'' முடிவாகச் சொல்லி விட்டார் தேசிகாச்சாரி.

''மணியக்கார்...! உங்களை நான் அரெஸ்ட் பண்றேன்.''

''பேஷாச் செய்யுங்கோ.''

''ரங்கபாஷ்யம், இவரை ஜீப்பிலே ஏத்திண்டு போய் மங்கலம் போலீஸ் ஸ்டேஷனிலே ஒப்படைச்சுட்டு வந்துடு. இந்தக் கம்ப்ளெய்ண்டை இன்ஸ்பெக்டரண்டை கொடு!''

கரகரத்த குரலிலே கட்டளை பிறப்பித்து விட்டு 'விருட்'டென்று எழுந்து எங்கோ வேகமாக வெளியேறினார் சப் கலெக்டர்.

ஜீப் ஆலப்பாக்கம் ஊர்க் கோடி அரச மரத்தடிப் பிள்ளையார் கோவிலருகே சற்று நின்றது. கடைசி முறையாகப் பிள்ளையாரைத் தொழுது கொள்வதற்காக ரங்கபாஷ்யத்

''டேய், வேணும்டா!... அவரை அழுகிய முட்டையாலே அடிக்க வேண்டாம்! பாவம்... அவர் ஸ்ட்ரிக்ட் வெஜிடேரியன்! அழுகிய தக்காளியால் அடிப்போம்!''



தின் அனுமதி பெற்று வண்டியை விட்டிறங்கிய தேசிகாச்சாரியின் தீட்சண்யமான விழிகள் வியப்பினால் விரிந்தன.

புது மணமக்கள் இருவர் மாலையும் கழுத்துமாகத் எதிர்கொண்டு வருவதைக் கண்டார். யார் அவர்கள்?

ராஜன் — நிர்மலா.

''எங்களை ஆசிர்வாதம் பண்ணுங்கோ மாமா.''

மனைவி சகிதம் தம்மை மண்டியிட்டு வணங்கிய மணமக்களைத் தூக்கித் தழுவிக் கொண்ட தேசிகாச்சாரியின் பாச உள்ளம் பூரிப்பில் திளைத்தது.

''தீர்க்காயுசா இருங்க மாப்பிள்ளை. தீர்க்க சுமங்கலியா இரும்மா.'' மணமக்களை மனம் நிறைந்து வாழ்த்தினார் தேசிகாச்சாரி.

ஆனால் அவர் நெஞ்சில் ஒரு நெருடல்.

''மாப்பிள்ளை... என்ன இது? ஒரு குற்றவாளியோட மகளை....''

''மணியக்கார்... உங்களை நான் அரெஸ்ட் பண்ணினேன். அது, சப் கலெக்டர் என்ற முறையில். கடமை எனக்கு இட்ட கட்டளை. ஆனா, மாமா, உங்க மகளைத் தெய்வ சந்நிதானத்திலே நான் திருமணம் பண்ணின்டேன். அவளோட பூரண சம்மதத்தைத் தெரிஞ்சிண்ட பிறகு. இது சாதாரணக் குடிமகன்கிற வகையிலே. மனிதாபிமானம் எனக்குத் தந்த சமுதாய உரிமை.''

''அப்பா!'' — கலக்கமும் களிப்பும் கலந்து துறவாடிக் கொண்டிருந்த நிர்மலாவின் நெஞ்சம் உணர்ச்சிக் குழம்பாய் உருகியது.

''அழாதேம்மா... ஒரு சத் புருஷனைக் கணவனா அடைஞ்ச நீ பாக்கியசாலி! புக்கத்திலே சமத்தா இருக்கணும். புரியறதா?''

''சரிப்பா.''

''இனிமே எல்லாமே உனக்கு அவர் தான்.''

''அப்பா....'' அணை உடைத்து வெளிப்பட்ட அழுகையை அடக்க மாட்டாமல் விசித்த மகளுக்கு ஆறுதல் கூறினார் தேசிகாச்சாரி.

## வாக்குரிமையே உங்களுக்குள்ள
## உயர் மதிப்பு மிக்க உரிமை

# செல்லுபடியாகும் வகையில் உங்கள் வாக்கு அமையட்டும்

வாக்களிக்கும்போது உங்கள் வாக்கை செல்லுபடியாகும் வகையில் செலுத்துங்கள்.

வருகின்ற 1980 ஆண்டுத் தேர்தலில் பயன்படுத்தப்பட இருக்கும் வாக்குச் சீட்டின் மாதிரி அருகே உள்ளது.

ஒன்பது வேட்பாளர்களுக்கு மேல் இருந்தால் அவர்களின் பெயர்களும் சின்னங்களும் இரண்டு படிவங்களில் கொடுக்கப்படும். ஆகையால் வாக்களிக்கும்போது கவனம் வேண்டும்.

சின்னத்தின் மீதோ அல்லது வேட்பாளரின் பெயர் மீதோ முத்திரையிடுங்கள்.

உங்கள் வாக்கு செல்லுபடியாகும் வகையில் அமையட்டும்.

- உங்கள் வாக்கு இரகசியமானது. அச்சமின்றி வாக்களியுங்கள்.
- வாக்குரிமை உங்கள் பிறப்புரிமை. அது உங்கள் கடமையும்கூட. அதனை உபயோகியுங்கள்.




வேட்பாளர்களிடமிருந்தோ அல்லது அவர் கட்சிகளிடமிருந்தோ எந்த வகையான அன்பளிப்போ இலவச வாகன வசதியோ பெறுவது தவறு.

வாக்குகளை பதிவு செய்யும் நேரம்
காலை 8-30 முதல் மாலை 4-30 வரை





# கல்கி  காலண்டர் 1980

பிரிண்ட் BLOW UP செய்து பார்க்கவும்

### JANUARY
மார்கழி சித். ௵ தை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 6 / 22 | 13 / 29 | 20 / 6 | 27 / 13 |
| Mon தி | | 7 / 23 | 14 / 30 | 21 / 7 | 28 / 14 |
| Tue செ | 1 / 17 | 8 / 24 | 15 / 1 | 22 / 8 | 29 / 15 |
| Wed பு | 2 / ○18 | 9 / 25 | 16 / 2 | 23 / 9 | 30 / 16 |
| Thu வியா | 3 / 19 | 10 / 26 | 17 / ●3 | 24 / 10 | 31 / ○17 |
| Fri வெ | 4 / 20 | 11 / 27 | 18 / 4 | 25 / 11 | |
| Sat சனி | 5 / 21 | 12 / 28 | 19 / 5 | 26 / ●12 | |

### FEBRUARY
தை சித்தா. ௵ மாசி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 3 / 20 | 10 / 27 | 17 / 5 | 24 / 12 |
| Mon தி | | 4 / 21 | 11 / 28 | 18 / 6 | 25 / 13 |
| Tue செ | | 5 / 22 | 12 / 29 | 19 / 7 | 26 / 14 |
| Wed பு | | 6 / 23 | 13 / 1 | 20 / 8 | 27 / 15 |
| Thu வியா | | 7 / 24 | 14 / 2 | 21 / 9 | 28 / 16 |
| Fri வெ | 1 / 18 | 8 / 25 | 15 / 3 | 22 / ●10 | 29 / 17 |
| Sat சனி | 2 / 19 | 9 / 26 | 16 / ●4 | 23 / 11 | |

### MARCH
மாசி சித்தா. ௵ பங்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | 30 / 17 | 2 / 19 | 9 / 26 | 16 / ●3 | 23 / 10 |
| Mon தி | 31 / ○18 | 3 / 20 | 10 / 27 | 17 / 4 | 24 / 11 |
| Tue செ | | 4 / 21 | 11 / 28 | 18 / 5 | 25 / 12 |
| Wed பு | | 5 / 22 | 12 / 29 | 19 / 6 | 26 / 13 |
| Thu வியா | | 6 / 23 | 13 / 30 | 20 / 7 | 27 / 14 |
| Fri வெ | | 7 / 24 | 14 / 1 | 21 / ●8 | 28 / 15 |
| Sat சனி | 1 / ○18 | 8 / 25 | 15 / 2 | 22 / 9 | 29 / 16 |

### APRIL
பங். சித்தா. ௵ சித்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 6 / 24 | 13 / 1 | 20 / 8 | 27 / 15 |
| Mon தி | | 7 / 25 | 14 / 2 | 21 / 9 | 28 / 16 |
| Tue செவ் | 1 / 19 | 8 / 26 | 15 / ●3 | 22 / 10 | 29 / 17 |
| Wed பு | 2 / 20 | 9 / 27 | 16 / 4 | 23 / 11 | 30 / ○18 |
| Thu வியா | 3 / 21 | 10 / 28 | 17 / ●5 | 24 / 12 | |
| Fri வெ | 4 / 22 | 11 / 29 | 18 / 6 | 25 / 13 | |
| Sat சனி | 5 / 23 | 12 / 30 | 19 / 7 | 26 / 14 | |

### MAY
சித். ரௌத். ௵ வை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 4 / 22 | 11 / 29 | 18 / 5 | 25 / 12 |
| Mon தி | | 5 / 23 | 12 / 30 | 19 / 6 | 26 / 13 |
| Tue செ | | 6 / 24 | 13 / 31 | 20 / 7 | 27 / 14 |
| Wed பு | | 7 / 25 | 14 / ●●1 | 21 / 8 | 28 / 15 |
| Thu வியா | 1 / 19 | 8 / 26 | 15 / 2 | 22 / 9 | 29 / ○16 |
| Fri வெ | 2 / 20 | 9 / 27 | 16 / 3 | 23 / 10 | 30 / 17 |
| Sat சனி | 3 / 21 | 10 / 28 | 17 / 4 | 24 / 11 | 31 / 18 |

### JUNE
வை. ரௌத். ௵ ஆனி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | 1 / 19 | 8 / 26 | 15 / 1 | 22 / 8 | 29 / 15 |
| Mon தி | 2 / 20 | 9 / 27 | 16 / 2 | 23 / 9 | 30 / 16 |
| Tue செவ் | 3 / 21 | 10 / 28 | 17 / 3 | 24 / 10 | |
| Wed பு | 4 / 22 | 11 / ●29 | 18 / 4 | 25 / 11 | |
| Thu வியா | 5 / 23 | 12 / ●30 | 19 / 5 | 26 / 12 | |
| Fri வெ | 6 / 24 | 13 / 31 | 20 / 6 | 27 / 13 | |
| Sat சனி | 7 / 25 | 14 / 32 | 21 / 7 | 28 / ○14 | |

### JULY
ஆனி ரௌத். ௵ ஆடி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 6 / 22 | 13 / 29 | 20 / 5 | 27 / ○12 |
| Mon தி | | 7 / 23 | 14 / 30 | 21 / 6 | 28 / 13 |
| Tue செ | 1 / 17 | 8 / ●24 | 15 / 31 | 22 / 7 | 29 / 14 |
| Wed பு | 2 / 18 | 9 / 25 | 16 / 1 | 23 / 8 | 30 / 15 |
| Thu வியா | 3 / 19 | 10 / 26 | 17 / 2 | 24 / 9 | 31 / 16 |
| Fri வெ | 4 / 20 | 11 / ●27 | 18 / 3 | 25 / 10 | |
| Sat சனி | 5 / 21 | 12 / 28 | 19 / 4 | 26 / 11 | |

### AUGUST
ஆடி ரௌத். ௵ ஆவணி

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | 31 / 15 | 3 / 19 | 10 / ●26 | 17 / 1 | 24 / 8 |
| Mon தி | | 4 / ●20 | 11 / 27 | 18 / 2 | 25 / ○9 |
| Tue செ | | 5 / 21 | 12 / 28 | 19 / 3 | 26 / 10 |
| Wed பு | | 6 / 22 | 13 / 29 | 20 / 4 | 27 / 11 |
| Thu வியா | | 7 / 23 | 14 / 30 | 21 / 5 | 28 / 12 |
| Fri வெ | 1 / 17 | 8 / 24 | 15 / 31 | 22 / 6 | 29 / 13 |
| Sat சனி | 2 / 18 | 9 / 25 | 16 / 32 | 23 / 7 | 30 / 14 |

### SEPTEMBER
ஆவ. ரௌத். ௵ புரட்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 7 / 22 | 14 / 29 | 21 / 5 | 28 / ●12 |
| Mon தி | 1 / ●16 | 8 / 23 | 15 / 30 | 22 / 6 | 29 / 13 |
| Tue செ | 2 / 17 | 9 / ●24 | 16 / 31 | 23 / 7 | 30 / 14 |
| Wed பு | 3 / 18 | 10 / 25 | 17 / 1 | 24 / ○8 | |
| Thu வியா | 4 / 19 | 11 / 26 | 18 / 2 | 25 / 9 | |
| Fri வெ | 5 / 20 | 12 / 27 | 19 / 3 | 26 / 10 | |
| Sat சனி | 6 / 21 | 13 / 28 | 20 / 4 | 27 / 11 | |

### OCTOBER
புரட். ரௌத். ௵ ஐப்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 5 / 19 | 12 / 26 | 19 / 3 | 26 / 10 |
| Mon தி | | 6 / 20 | 13 / 27 | 20 / 4 | 27 / 11 |
| Tue செ | | 7 / 21 | 14 / 28 | 21 / 5 | 28 / 12 |
| Wed பு | 1 / 15 | 8 / ●22 | 15 / 29 | 22 / 6 | 29 / 13 |
| Thu வியா | 2 / 16 | 9 / 23 | 16 / 30 | 23 / ○7 | 30 / 14 |
| Fri வெ | 3 / 17 | 10 / 24 | 17 / 1 | 24 / 8 | 31 / 15 |
| Sat சனி | 4 / 18 | 11 / 25 | 18 / 2 | 25 / ●9 | |

### NOVEMBER
ஐப். ரௌத். ௵ கார்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | 30 / 15 | 2 / 17 | 9 / 24 | 16 / 1 | 23 / 8 |
| Mon தி | | 3 / 18 | 10 / 25 | 17 / 2 | 24 / 9 |
| Tue செ | | 4 / 19 | 11 / 26 | 18 / 3 | 25 / 10 |
| Wed பு | | 5 / 20 | 12 / 27 | 19 / 4 | 26 / 11 |
| Thu வியா | | 6 / 21 | 13 / 28 | 20 / 5 | 27 / 12 |
| Fri வெ | | 7 / ●22 | 14 / 29 | 21 / ○6 | 28 / 13 |
| Sat சனி | 1 / 16 | 8 / 23 | 15 / 30 | 22 / ●7 | 29 / 14 |

### DECEMBER
கார். ரௌத். ௵ மார்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| Sun ஞா | | 7 / ●22 | 14 / 29 | 21 / ○6 | 28 / 13 |
| Mon தி | 1 / 16 | 8 / 23 | 15 / 30 | 22 / 7 | 29 / 14 |
| Tue செவ் | 2 / 17 | 9 / 24 | 16 / 1 | 23 / 8 | 30 / 15 |
| Wed பு | 3 / 18 | 10 / 25 | 17 / 2 | 24 / 9 | 31 / 16 |
| Thu வியா | 4 / 19 | 11 / 26 | 18 / 3 | 25 / 10 | |
| Fri வெ | 5 / 20 | 12 / 27 | 19 / ●4 | 26 / 11 | |
| Sat சனி | 6 / 21 | 13 / 28 | 20 / 5 | 27 / 12 | |

சொல்லிவிடலாமா என்று நினைத்தேன்.

அதற்குள் ஷோபனா முந்திக் கொண்டாள்.

''டிக்கட்டை எச்சி பண்ணும தாங்களேன் ப்ளீஸ்.''

அவள் சொன்னதைக் காதில் வாங்கிக் கொண்டதாய்க் காட்டிக் கொள்ளாமலேயே அடுத்த டிக்கெட்டுக்கு நாக்கைத் தொட்டுக் கொண்டார் கண்டக்டர்.

அதுக்கெல்லாம் ப்ரேம்தான்.

போஸ்ட் கிராஜுவேட் மாணவன் ஒருவன் பார்ட் டைமாகக் கண்டக்டர் வேலைக்கு வந்திருக்கிற மாதிரி தெரியும், ப்ரேமைப் பார்க்கிறபோது. இந்த உடலமைப்புக்குச் சாதாரண முரட்டுக் காக்கித் துணி ஆகாது என்று அவருடைய கம்பெனியில்தான் அவருக்கென்று ஸ்பெஷலாய் டெர்ரி காட்டனில் யூனிஃபார்ம் தைத்துக் கொடுத்தார்களோ அல்லது இவர்தான் தம் செலவில் பிரத்யேகமாகத் தைத்துக் கொண்டாரோ தெரியாது; எப்போதும் நேர்த்தியான உடை; விசாலமான ஃப்ரேம் போட்ட எடுப்பான கண்ணாடி; பளபளப்பாய் ஷேவ் செய்யப்பட்ட முகம்; ஒழுங்காய் ஷேப் செய்யப்பட்ட பிசிறில்லாத மீசை; மீசைக்குக் கீழே பாதி ஒளிந்து கொண்டு மெல்லிசாய்ப் புன்னகை; டிக்கெட் கிழித்துக் கொடுப்பதில் ஒரு லாகவம்.

ப்ரேம் மேலே மிஸ் புஷ்பா விசேஷ அபிமானம் கொண்டு விட்டதில் ஆச்சரியமேயில்லை.

இன்றைக்குக் கண்டக்டராய் ப்ரேம் வரவில்லையென்றதும் ஜங்ஷன், டவுன் வரைக்கும் போக வேண்டிய நிறைய மாணவிகள் இந்த பஸ்ஸில் ஏறாமல் நின்று விட்டார்கள்.

கண்டக்டர் விசில் கொடுத்ததும் கியர் மாற்றிய டிரைவர், கேட்டுக்குள்ளே யிருந்து அவசரம் அவசரமாய் வெளிப்பட்ட உருவத்தைப் பார்த்துக் கொஞ்சம் தாமதித்தார்.

மிஸ் புஷ்பா.

பஸ்ஸைப் பிடித்துவிட்டதில் எழுந்த சந்தோஷம், உள்ளே ஏறிக் கண்டக்டரைப் பார்த்த கணத்தில் விழுந்து விட்டது தெரிந்தது. நகர்ந்து உட்கார்ந்து இடம் கொடுக்கிறபோதே கருவிழிகளை இடப் பக்கம் ஒதுக்கி மிஸ் புஷ்பாவின் முகத்தை ஆராய்ந்தேன். வறண்டு போயிருந்தது.

வரதட்சிணைக் கொடுமையினாலோ தோஷ ஜாதகத்தினாலோ அல்லது கீழே இறக்கி வைக்க முடியாத குடும்பச் சுமையினாலோ கல்யாணத்தைப் புறக்கணித்துக் கல்விச் சேவைக்கு வாழ்க்கையை அர்ப்பணித்து விடவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு ஆளாகி விட்ட பெண் லெக்சரர்களோடு மாணவிகளுக்கு இயற்கையாகவே ஒரு நெருக்கம். அதிலும் மிஸ் புஷ்பாவுக்கு என்னிடத்தில் அந்நியோந்யம் கொஞ்சம் கூடுதல்.

நான் ஏற்கனவே அனுமானித்து வைத்திருந்த சங்கதியை மிஸ் புஷ்பா அந்தரங்க



மாய் என்னிடம் வெளிப்படுத்தியது ஒரு நாள் சாயங்காலம் காலேஜிலிருந்து திரும்புகிறபோதுதான்.

''சரோ, புதுக் கவிதை வாசிக்கிறதுண்டா நீ?''

''எப்போதாவது வாசிப்பேன் மிஸ்.''

''நானொண்ணு எழுதியிருக்கேன் பாக்கறியா?''

''ஏதாவது பத்திரிகைக்கு அனுப்பவா மிஸ்?''

''சே, எனக்கே எனக்கு வைச்சுக்கத்தான். வாசிச்சுப் பாரேன்.''

நான் வாசித்திருக்கிற புதுக் கவிதைகளில் பல எனக்குப் புரியாதவை. ஆனால் இது புரிந்தது மட்டுமல்ல; மனசில் அப்படியே பதிந்தும் விட்டது.

என் சோகங்களை
இறக்கிவைத்து இளைப்பாற
சுமைதாங்கிக் கல்லோ இல்லாததால்
நானே
சுமைதாங்கியாகிப் போனேன்.
இன்று இந்தச்
சோகச் சேற்றில்
சுகமாய் சில
செந்தாமரைகள்
உன்னால்
இந்த
சோகந்தாங்கியின் மேல்
சின்னச் சின்ன சந்தோஷங்களை
ஏற்றி வைத்தவனே
என்னிலிருந்து இவற்றை
இறக்கி விடாதே!

''இதுக்குத் தலைப்பு வைக்கலியா மிஸ்?''

''என்ன தலைப்பு வைக்கலாம், நீதான் சொல்லேன்?''

'' 'ப்ரேமை'ன்னு வையுங்க.''

மிஸ் புஷ்பா இலேசாய் அதிர்ந்தது தெரிந்தது. சந்தோஷமான அதிர்ச்சி. சே, இவளுக்கு ஏற்கனவே தெரிந்திருக்கிறதே என்று வெட்கம் கொஞ்சம்; பரவாயில்லை, என் விஷயங்களை அந்தரங்கமாய்ப் பகிர்ந்து கொள்ள ஒருத்தி இருக்கிறாள் என்று சந்தோஷம் கொஞ்சம்; இருப்பிடத்திலிருந்து நழுவி விழியோரங்களில் அலைகிற உதிரிக் கூந்தல் கொஞ்சம்.... அந்த முகத்துக்கு ஃப்ரேம் போட்டு நிரந்தரமாய் மனசுக்குள் மாட்டி வைத்துக் கொள்ளலாம் போலிருந்தது.

**எ**ந்த நேரத்திலும் வருவேன் என்று பயங்காட்டிக் கொண்டிருந்த மழை ஆக்ரோஷமாய்த் தாக்க ஆரம்பித்தது. ஜன்னலோரமிருந்த ஷோபனாவின் கன்னத்தில் நீர்த் திவலைகள். இந்தப் பக்கம் புஷ்பாவின் கன்னங்களிலும்.... இல்லை, அது தண்ணீர்த் துளிகள் இல்லை. என் பார்வை தன்னைத் தொடுவதை உணர்ந்து சுதாரித்துக்கொண்டு கர்ச்சீப்பைக் கண்களில் ஒற்றி யெடுத்த மிஸ் புஷ்பாவிடம் பேசினேன் மெதுவாய், ரொம்ப மெதுவாய், அந்தரங்கமாய்:

''என்ன மிஸ், என்ன ஆச்சு ஒங்களுக்கு?''

''ஒண்ணுமில்லே சரோ, என்னமோ நினைச்சுக்கிட்டேன்.''

''நோ எதுக்கு நீங்க அழுறீங்க? ப்ரேமுக்கு இன்னிக்கு வேறே பஸ்ஸிலே டியூட்டியா இருக்கலாம். இதுக்குப் போய் அழுவாங்களா? மாணவிகள் யாராவது பாத்திருந்தாங்கன்னு என்ன நெனைச்சிருப்பாங்க? ஒரு லெக்சரர் நீங்க....?

''மிஸ், ரிலாக்ஸ் மிஸ்; நாளக்கி வராமலா போயிரப் போறாரு? இந்த பஸ்ஸுக்கு அவர்தானே பர்மனென்ட் கண்டக்டர் மாதிரி....ஆமா என்ன புடவையெல்லாம் புதுசாத் தெரியுது, தலை நெறையப் பூ வேறே என்ன விசேஷமோ?''

''விசேஷம்தான் சரோ, என்னோட பர்த்டே.''

''ஓ, லவ்லி! என்ட்ட சொல்லவேயில்லே?''

''யார்ட்டயுமே சொல்லலம்மா. இன்னிக்குத்தான் என்னோட க்ளாஸ் எனக்குக் கெடையாதே. பஸ்ல வச்சு சொல்லலாம்னு இருந்தேன். பர்த்டே யெல்லாம் ஒரு விசேஷமா நான் நெனைக்கிறதேயில்ல; இந்த வருஷம் என்னமோ தோணிச்சு, புதுப் புடவை கட்டிக்கிட்டேன்; ரெண்டு காட்பரீஸ் வாங்கிக்கிட்டேன்.''

''ஒரு நல்ல நாள்லே நீங்க விசேஷமா டிரஸ் பண்ணிக்கிட்டு வந்திருக்கிறபோது ப்ரேமைப் பார்க்க முடியலேங்கறது, ப்ரேம் ஒங்களப் பார்க்க முடியாமப் போச்சேங்கறது ரொம்ப வருத்தமான விஷயம்தான். ஆனா, அதுக்காக நீங்க அழுவது.... மிஸ், நான் ஒங்க கிட்ட வெளிப்படையா ஒரு கேள்வி கேக்கட்டா?''

''நோ, நோ... ப்ளீஸ் அந்தக் கேள்வியை நீ கேக்காதே சரோ; அதுக்கு எனக்குப் பதில் தெரியாது.''

''ப்ரேம் கல்யாணமானவர்ங்கறதாவது தெரியுமா? போன ஸண்டே ஷோபனா ஜெண்ட்ரல் தியேட்டர்ல ஒய்ஃபோட பார்த்தாளாம். ஒய்ஃப்தான் அதுன்னு நிச்சயமாச் சொல்றா.''

''ஆமா சரோ. நாங்கூடக் கேள்விப்பட்டேன்.''

''விஷயம் தெரிஞ்சும்கூட எப்படி நீங்க?''

''அதானேம்மா புரியலியேங்கறேன். என்னமோ அந்த முகத்தைப் பார்க்கறபோது

---

''எனக்கு வோட்டளித்தால் உங்கள் ஊருக்குத் தண்ணீர்க் குழாய்கள் வரும்'' - இப்படி தண்ணீரில்லாத ஊரில் அவர் சத்தியம் செய்தார்.

மக்களும் தேர்ந்தெடுத்தார்கள். தண்ணீர்க் குழாய்களும் வந்தன.

அடுத்த தேர்தல் வந்தது. ''குழாய்களில் தண்ணீர் வேண்டுமா? அப்படியானால் என்னையே தேர்ந்தெடுங்கள்'' - இது அதே வேட்பாளர்.

இரா. ஸ்ரீதர்



ஒரு வித்தியாசமான சோகம்; அந்த உரு வத்தை நெஞ்சுக்குள்ளேயே இருத்தி வச் சுக்கிறதுல ஒரு பிடிவாதம்; நிஜங்களைப் பிடிக்க முடியாட்டியும் பிம்பங்களைப் பிடிச்சு வச்சுக்கற ஒரு சின்னப்பிள்ளைத்தனமான சந் தோஷம். அந்தச் சந்தோஷத்தெ மிஸ் பண்றதுக்கு என்னுல முடியாது போலே யிருக்கே...''

நினைவுகளெல்லாம் மிஸ் புஷ்பாவையே வளைய வந்து கொண்டிருந்தன. கல்யாணம் அன்னியமாகிப்போன, சுகங்கள் மறுக்கப் பட்டுவிட்ட ஒரு பெண்ணின் சின்னச் சின்ன சந்தோஷங்களுக்குத் தடை விதிக்கப்படுவது கொடுமையானதுதான்! இந்த ப்ரேம் இன் னைக்குப் பார்த்து ஏன் வராமல் போனுர்? இந்தக் கண்டக்டரிடம் கேட்டுப் பார்க் கலாம்; ஆனுல் எப்படிக் கேட்க... ஓ. ஷோபனு இருக்கிருளே!''

''ஷோபனு, ப்ரேம் இன்னிக்கு லீவா என்னன்னு அந்த ஆள் கிட்டக் கேளேன்.''

''ஆஹா, கேட்டுட்டாப் போச்சு, இந் தாங்கோ, கண்டக்டர், ஸார்! ப்ரேம் இன் னைக்கு லீவா?'' என்று கேட்டாள்!

புதுக் கண்டக்டருக்கு இது விஷயம் தெரியாததால் டிரைவரிடம் போய்விட்டுத் திரும்பி வந்தார்.

''ஒங்க ப்ரேமுக்கு இன்னிக்குக் கல்யாண மாம் நாளாம். லீவு போட்டிருக்காராம். பெண்டாட்டியோட நூலியா சினிமா கினிமா போயிருப்பார்; அவருக்கென்ன துரை!''

திரும்பவும் மிஸ் புஷ்பாவின் கண்கள் பனித்துவிட்டது தெரிந்தது. பஸ் வேகம் குறைந்து குலுங்கி நின்றது. ஸ்டாப்பின் பெயரைக் கண்டக்டர் உரக்க உச்சரித்தார். ரெண்டு காட்பரீஸ் சாக்லெட் என் கையில் வைத்து அழுத்தப்பட்டன. மிஸ் புஷ்பா இறங்க வேண்டும்.

''என்னோட குடையைக் கொண்டு போங்க மிஸ். ஷோபனு வச்சிருக்கா; நாங்க அட்ஜெஸ்ட் பண்ணிக்குவோம்.''

''வேணும் சரோ. நான் போயிடுவேன்.''

''ஹேய், காட்பரீஸ் ஏது! ஏது? எனக்கு?''

ரெண்டையும் அவள் கைகளுக்கு மாற்றி னேன்.

''ஒண்ணு போதும். ரெண்டுதானே இருக்கு?''

''எனக்கு வேண்டாம். ரெண்டையும் நீயே வெச்சுக்க.''

ஷோபனு என்னை ஆச்சரியமாய்ப் பார்த் தாள். மிஸ் புஷ்பா புடவைத் தலைப்பால் தலையைப் போர்த்திக் கொண்டு இறங்குவதை நான் பார்த்துக் கொண்டிருந்தேன்.

''கொடை கொண்டு வரலியாம்மா.... ஐயே, மழை பலமாப் பெய்யுதே....'' என்று கண்டக்டர் அனுதாபப்பட்டார்.

இன்றைக்குக் குடை இல்லாமல் மழையில் நனைந்து போவது மிஸ் புஷ்பாவுக்கு நல்லது தான். முகத்தில் தண்ணீர் சொட்டச் சொட் டப் போகிறபோது எது மழைத் தண்ணீர், எது கண்ணீர் என்று யாருக்கும் புலப்படா தல்லவா?

---

# பூக்குழி

## லக்ஷ்மி

### 19

சிங்காரத்துடன் அருள்மிகு திரு முத்து மாரி கோவிலுக்கு நடந்து போய்விட்டு அவன் சிறிது பொழுது முன்புதான் வந்து மாடியறையில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அவனுக்காக அம்மனுக்குத் தீபாராதனை காட்டிவிட்டு, கற்பூரத் தட்டுடன் அருகில் நெருங்கினார் அர்ச்சகர்.

காமேஷின் நெஞ்சம் படபடத்தது! 'இந்த மனிதர் என்ன சொல்லப் போகிறார்?' எதிர்பார்ப்பின் துடிப்பு.

''இன்னிக்குக் காலையிலதான் வந்தாப் பிலயா? பிரயாணமெல்லாம் சௌகர்யமா இருந்துதா? எல்லாம் அம்பாளின் கிருபை. அவள் இல்லாமல் அணுவளவும் அசையாது. விழா சமயத்துல சரியா வந்துட்டீங்க. ஆச்சரியம் இல்லையா? கொஞ்சம் இளைச்சுப் போயிருக்கீங்க. வீட்டுச் சாப்பாடு ஒரு நாலு நாள் சாப்பிட்டா உடம்பு முன்னைப் போல் நல்லாயிடும்.'' படபடவென்று பேசியபடியே பற்களைக் காட்டினார். ஒரே வெற்றிலைக் காவி.

காமேஷிடம் எத்தனையோ வேண்டாத பழக்கங்கள் இருந்தன. ஆனால் மற்றவர்களது சில போக்குகள் அவனுக்குப் பிடிக்காதவை, வெற்றிலை பாக்குப் போட்டுக் குதப்பி அதைத் துப்புவது. காவிக் கறை ஏறிய அவரது பற்களைப் பார்க்கச் சகிக்காது ஜோதியை வணங்கிவிட்டுத் திரும்பினான்.

''இந்தாங்க. என்ன இப்படி மறந்திட்டீங்க? நீங்க வந்ததும் காப்புக் கட்டிக்க வேணுமா?''



''இடத்தைக்காலி பண்ணிட்டுச் சீக்கிரம் வாங்க... வீட்டுக்குப்போய் முதல்லே ஒரு புடவையை உடுத்திக்கணும்!''

''ஓ! தெய்வ கூத்து!'' அதிர்ந்து போய் நின்றான் அவன். சிங்காரம் தன் மடியில் பத்திரமாக வைத்திருந்த காகிதப் பொட்டலத்தை எடுத்தான்.

''அம்மா கொடுத்தனுப்பினாங்க. உங்க கையாலே கட்டி விடுங்கன்னு சொன்னாங்க!'' தேவியின் பாதத்தில் வைத்துப் பக்தி சிரத்தையுடன் வாங்கிப் போயிருந்த அந்தக் கங்கணத்தை அகல்யா சிரத்தையுடன் சிங்காரத்திடம் கொடுத்தனுப்பி விட்டிருந்தாள்.

''அதுக்கென்ன பேஷா செய்றேன். அம்பாள் சகல சௌபாக்கியங்களையும் கொடுக்கட்டும்னு பிரார்த்தித்துக் கொண்டு கட்டறேன்'' என்று கூறியபடியே கற்பூரத் தட்டை வைத்துவிட்டுக் கண்களை மூடியபடியே தோத்திரம் செய்தார் அர்ச்சகர். பிறகு கங்கணத்தை எடுத்து அவன் கையில் கட்டினார்.

''சாதாரணமா பூக்குழியில் இறங்க ஒரு மண்டலம் விரதமா இருக்கணும். கால தேசத்தை உத்தேசிச்சு இந்த விதிவிலக்கைத் தளர்த்திக்கிறது பிசகில்லே. ஒரே நாள் கடும் விரதம் இருந்துகூடப் பூக்குழியில் இறங்கலாம். இன்னியிலிருந்து இன்னும் சில நாட்கள் தானே இருக்கு. நீங்க கடும் விரதம் இருந்தால் போதும்'' என்று புன்னகைத்தார் அர்ச்சகர்.

'பூக்குழி! அதன் பொருள் என்ன?' யாரைக் கேட்பது? சிங்காரத்தையா, அர்ச்சகரையா? துணிவு வராமல் எச்சிலை விழுங்கிக்கொண்டான் அவன்.

காலைக் கழுவிக் கொண்டு மாடியறையில் வந்து உட்கார்ந்தவன், 'பூக்குழின்னாரே அர்ச்சகர்! அதுக்கு இன்னும் எத்தனை நாள் இருக்கு?''என்று பின்னாலேயே வந்த சிங்காரத்திடம் பொதுவாகக் கேட்டு வைத்தான்.

மேஜை நாற்காலி மீது படியாத தூசிகளைத் தட்டிக் கொண்டு, ஊரிலிருந்து ஐயா தான் கேட்ட குட்டி ரேடியோ வாங்கி வந்திருக்கிறாரே என்ற தவிப்பிலே, சிங்காரம், இன்னமும் திறக்காது அடுக்கி வைத்திருந்த பெட்டிகளைப் பார்த்தபடியே பதிலளித்தான்.

''ஐந்தாறு நாள் இருக்கு. இந்த வருஷம் தீமிதிச்சு, ரொம்பத் தடபுடல் ஏற்பாடுகள் நடக்குதுங்க. போன வருஷத்தை விட அகலமா குழி வெட்டித் தயார் செய்யறாங்களாம்.''

'தீ மிதிப்பதா? பூக்குழி என்றால் தீக்குழியா? அடப் பாவிகளா? இது தெரியாமல் போச்சே!' நெஞ்சில் திகில் மூண்டது அவனுக்கு. சிங்காரத்தைப் பார்த்தான். இன்னும் பல விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள ஆவல். ஆனால் வேஷம் வெளிப்பட்டுவிடுமே என்ற அச்சம்.

''ஐயாவுக்கு என்னங்க, சும்மா பூந்து விளையாடுவீங்களே. பத்து வயசுக் குழந்தையா இருக்கறப்பவே, பூசாரி கையைப் பிடிச்சுக்கிட்டு, இந்த ஊரே பார்த்து அதிசயிக்கிறாப்போல நெருப்பு மேலே நிம்மதியா நடந்து வந்தவராச்சுதே! வருஷா வருஷம் நீங்க நேத்திக் கடன் செய்வீங்களே?''

பாவிப் பயல் ராஜ்குமார்! என்னென்னவோ சொன்னான். இந்த ரகசியத்தை மட்டும் சொல்லவில்லையே? இப்படி ஓர்



இக்கட்டிலே மாட்டிக்கொண்டு... மனம் அலைபாய ஆரம்பித்தது.

''சரி சரி! போ நீ... அம்மா வரட்டும் பேசிக்கிறேன்.'' ஆத்திரத்தோடு அவளை விரட்டினான். எரிச்சல் அதிகமாகவே, அகல்யாவைக் கீழே இருந்து அதிகாரமாக அழைத்தான்.

மேலே வந்த அகல்யாவுக்கு ஒருவிதக் கலவரம்.

''இந்தக் கங்கணத்தை நான் ஏன் கட்டிக்கணும்? பூக்குழியில இறங்கணும்னு என்ன நிர்ப்பந்தம்?'' என்று வெடித்தான் அவளிடம்.

பால் டம்ளரை மேஜையின் மேல் வைத்துவிட்டு, அகல்யா சற்று எட்டியே நின்றாள் அவளுக்குள் தாங்க முடியாத குழப்பம்.

கடிதத்துக்குக் கடிதம் தனது வேண்டுதலைப் பற்றி எழுதிவிட்டிருந்த கணவன். இப்போது மட்டும் ஏன் தடம் புரண்டு பேசுகிறான்? இது ராஜ்குமாரின் பேச்சாகத் தெரியவில்லையே? சிந்தித்தாள்.

மஞ்சள் வண்ண நூல் சேலையில் பளிச்செனக் குங்குமம் துலங்கிய நெற்றியோடு மல்லி

கைப் பூவும் புன்னகையுமாக, வாயிற்படி யருகே அவனது மனத்தை மயக்கும் அழகு சிற்பமாக நிமிர்ந்து பார்த்த காமேஷின் மனத்தில் எத்தனை எண்ணங்கள்? எத்தனை சலனங்கள்?

''ஏன் நின்னுக்கிட்டே இருக்கே? இப்படி உட்காரு. கால் வலிக்காதா? ஒண்ணுமே பேச மாட்டேங்கிறியே, ஆசையோட உன்னைக் காண வந்திருச்சேன்.''

அவன் எழுந்து அவள் அருகில் வந்தபோது அவள் சரேலென எட்டி நின்று கொண்டாள். உடல் முழுதும் நடுங்கியதன் காரணம் அவளுக்கே விளங்கவில்லை.

''முத்துமாரி விழாவிலே பூக்குழியில் இறங்கக் கையில் கங்கணம் கட்டிக் கொண்டு வந்திருக்கீங்க. விரதமா இருக்கணும்னு தெரியுமில்லியா? விரதம்னு சாப்பாட்ல மட்டும் இல்லே. உணர்வுகளிலும், பேச்சு, எல்லாத் நிலையும் கட்டுப்பாடு அனுஷ்டிக்கணும்.''




''நான்சென்ஸ்!'' உரக்கக் கத்தினான் காமேஷ். ''பூக்குழியில் இறங்க ஏற்பாடு செஞ்சது நீயா? என்னைக் கேக்காம ஏன் இந்த ஏற்பாடு?'' மீண்டும் கர்ஜித்தான்.

''புறப்படுவதற்கு முன், முத்துமாரி கோவிலில், நான் திரும்பிச் சுகமா வந்ததும் பூக்குழியில இறங்குறேனம்மான்னு வேண்டிக் கிட்டது மறந்திட்டதா? முத்துமாரியம்மன் சக்தியைப்பத்தித் தெரிஞ்சு கொண்டும் தவறுப்பேசறீங்க.'' வியப்புடன் அவனைப் பார்த்தபடி கேட்டாள் அவள்.

இப்படி ஒரு பயங்கரமான வேண்டுதலேயுடன் ராஜ்குமார் புறப்பட்டு வந்திருந்தானா? பூக்குழியில் இறங்குவதாகக் கூறி விட்டு தீக்குழியில் இறங்கி விட்டானே பாவிப் பயல்! முத்துமாரிக்கு இந்தச் சமாசாரம் தெரியாதா என்ன?

அடக்க மாட்டாத சிரிப்பில் அவன் 'ஹோ ஹோ' என்று சிரித்தான். இடுப்பின் மீது இரு கரங்களையும் வைத்தபடி, சினிமா வில்லன் போல் அவளை உறுத்துப் பார்த்தான்.

''இந்தக் குக்கிராமத்திலேயே வளைய வந்தபோது நான் பத்தாம்பசலியாக இருந்தேன். வெளி நாடு போய் உலகத்தைப் பார்த்து நல்லாப் புரிஞ்சுகொண்டு வந்திருக்கேன். இதெல்லாம் நாம் நாள்தொட்டு அனுசரிக்கும் மூடப் பழக்க வழக்கங்கன்னு எனக்குத் தோணிட்டுது. அதனால் இந்த முறை பூக்குழியில் நான் இறங்கப் போறதில்லே., விரதமும் இருக்கப் போறதில்லே, கிட்ட வா, அகல்யா! ஏன் எட்டி நிக்கறே?'' கையை நீட்டிக் கொண்டு முன்னே வந்தான்.

''வேண்டாங்க. நீங்க பூக்குழியில இறங்கப் போற சங்கதி ஊர் முழுதும் தெரிஞ்சிட்டுது. மாட்டேன்னு முடியுமா? அப்படித் திடீர்னு ஏன் ஒரு பயம் உங்களுக்கு? ஆத்தாள் மேலே நம்பிக்கை யில்லையா? இப்படி யெல்லாம் மட்டமாப் பேச எங்கே கத்துக்கொண்டீங்க? எட்டி நில்லுங்க. பூக்குழியில இறங்கி வரும் வரை நான் ஒருபொழுது. நீங்க இங்கே மாடியில்தான் தங்கி யிருக்கணும். நான் அத்தையோட கீழ் அறையில அவங்களுக்குத் துணையாத்தான் இருப்பேன். மாடிக்குச் சாப்பாடு எடுத்துக்கிட்டுச் சிங்காரம்தான் வருவான். அனாவசியமா எங்கேயும் போக வேண்டிய தேவை இல்லே. மனசு இருந்தா உங்க தாயாரை நாளைக்கு இரண்டு வேளை கீழே வந்து பாருங்க.... அது போதும்.''

அவள் முகத்தில் ஏன் இந்த ஆவேசம்? பேச்சில் ஏன் இப்படி ஒரு கோபம்? மஞ்சள் குருவியாக மயக்கம் கொடுத்தவள் இப்போது பத்திரகாளி போல் கண்கள் பளபளக்கப் பயமுறுத்துகிறாள்! அப்பா! பார்வையில் ஏன் இந்த நெருப்பு! காமேஷ் அதிகார தோரணையைச் சுருட்டி வைத்துவிட்டு, குழைவான குரலில் பேசத் தொடங்கினான்.

''உனக்கு என்ன வாங்கிட்டு வந்திருக்கேன்னு நீ இன்னமும் கேக்கலையே. உனக்குப் பிடிச்ச பச்சை, மஞ்சள், ஊதா இந்த நிறத்தில்தான் புடவை வாங்கிட்டு வந்திருக்கேன். பெட்டியைத் திறந்து எடுத்துத்தரேன். உடுத்திக்கிட்டு வா, பார்க்கலாம்.''

''வேணும். இப்போ எனக்கு இதெல்லாம் தேவையில்லே!'' கடூரமான குரலில் பட்டெனப் பதில் அளித்து விட்டதைக் கேட்டு அதிர்ந்து போனான் அவன்.

''நிச்சயதாம்பூலத்துக்குப் பச்சை வர்ண புடவைஸ் வாங்கின நினைப்பு வந்தது. ஒரு பச்சை ஷிபான் வாங்கினேன். மைசூர் போனபோது நீ ஊதா வர்ணச் சேலே உடுத்திக்கிட்டுப் புறப்பட்ட நினைப்பு வந்ததும் உடனே ஊதா நிறத்தில் ஒண்ணும் வாங்கிட்டேன். உனக்கு மஞ்சள் வர்ணம் ரொம்ப பிடிச்சதாச்சுதே....''

அவள் எதையுமே காதில் போட்டுக் கொண்டதாகத் தெரியவில்லை. உணர்ச்சியற்ற கல்லைப் போல வாசற்படியருகிலேயே நின்றாள்.

''பாலைச் சாப்பிடுங்க. சாப்பாடு சிங்காரத்துக்கிட்டக் குடுத்து விடறேன். அபிராமி அந்தாதி புத்தகம் மேஜை மேலே

இருக்கு. எடுத்துப் படியுங்கோ. கஷ்டமா இருந்தா சீர்காழி பாடின அபிராமி அந்தாதி டேப் அலமாரியில் பத்திரமா இருக்குது. டேப் ரிகார்டரில போட்டுக் கேட்டுக்கிடுங்க'' என்று உத்தரவிட்டாள் அவள்.

'எனக்கெதற்கு இப்படி ஒரு சிறைவாசம்' என்று ஆத்திரப்பட்டான் காமேஷ்.

''உணர்வுகள் வச்கிரமா ஓடும்போது கொஞ்சம் இழுத்துப் பிடிக்கணும் பாருங்க, அதுக்குத்தான். இதெல்லாம்னு வெச்சுக் கோங்க.'' பதிலுக்குக் காத்திராமல் அவள் படி இறங்கி விட்டாள்.

அதிசயமான பெண்ணாக இருக்கிறாளே இந்த அகல்யா. கண்களில் ஏன் அந்தக் கடுமை? ஒரு சமயம் சந்தேகமோ... ஊஹூம் அப்படியானால் பால் தம்ளருடன் ஏன் படி ஏறி வருகிறாள்? கொஞ்சம் விட்டுப் பிடிக்க வேண்டும். எங்கே போய்விடப் போகிறாள்? ராஜ்குமாராக அந்த வீட்டில் வந்து உட் கார்ந்தாகி விட்டது. பஸ் கண்டக்டரி லிருந்து பார்த்தவர் வரை நம்பியாகிவிட்டது. கிழவி பஞ்சரத்தினமும் நம்பி அவனைத் தழுவிக் கொண்டு அழுதாளே!

இவள் சுபாவத்தில் கொஞ்சம் முரடு. கூழைப் பசு போல் சீறுகிறாள். இருக்கட்டும். உதட்டைக் கடித்துக் கொண்டு யோசனை யுடன் அறைக்குள் முன்னும் பின்னுமாக உலாவினான்.

சிறிது பொழுதில் சிங்காரம் சாப்பாட்டுத் தட்டுடன் கீழே இறங்கினான்.

''சரியாகவே சாப்பிடலே.... அவருக்குப் பசியே இல்லையாம்!'' கூறியபடி தொட்டி முற்றத்தில் தட்டை வைத்தான். அகல்யா வந்து எட்டிப் பார்த்தாள். சோறும் குழம் பும் நாலாபுறமும் ஒதுக்கப்பட்டு அசிங்கமாகக் கிடந்தன. கணவனுக்காகத் தயாரித்த புட லங் கூட்டு, தொடாமல் கிடந்தது.

பகல் மூன்று மணி அளவில் மாமியாருக்குக் காப்பி கலந்து உபசரித்தாள்.

''மத்தியானமே ராஜ் நல்லா சாப்பிடலே யாம். சிங்காரம் சொன்னான். அலுப்புப் போல் இருக்கு. உங்கப்பா கொண்டு வந்து தந்த முறுக்கும், கடலே உருண்டையும் வச்சு, கொஞ்சம் சூடா காப்பியோட கொண்டு போய்க் குடு. உன் விரதத்தைப் பத்திக் குழந்தை புரிஞ்சுக்குவான். வேலையாள் கிட்ட சாப்பாடு குடுத்து விட்டது அவன் மனசுக்கு வேதனையாயிட்டுது போல் இருக்குது. போம்மா அகல்யா.''

மாமியார் உத்தரவை அவளால் மீற முடியவில்லை. கடலே உருண்டையும், முறுக் கும் கொண்ட தட்டுடன் காப்பி சகிதம் மெல்ல அவனது படுக்கை அறைக்குள் நுழைந்தபோது, அவர்களது பெரிய படுக்கை மீது வேரற்ற மரம் போல அவன் நீட்டி நிமிர்ந்து படுத்துக் கிடந்தான். ஆழ்ந்து உறங்குகிறான் என்று அவன் எழுப்பிய குறட்டை அறை வாயிலிலேயே அறிவித்து விட்டது.

ஓசைப்படாது, தட்டையும், தம்ளரை யும் அருகிலிருந்த மேஜை மீது வைத்து விட்டு, அவன் மீது பார்வையை ஓட விட்ட வள் ஒரு கணம் அதிர்ந்து போய்விட்டாள். நெஞ்சு படபடக்க, துக்கம் தொண்டையை இறுக்க அவள் ஒரே ஓட்டமாக இறங்கிப்பின் கட்டிலிருந்த முற்றத் தூணை ஆதரவாகப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

''முத்துமாரித் தாயே! சோதிக்கிறியே. உன் திருவிளையாட்டுக்கு நான்தானா அகப் பட்டேன்!'' கட்டுக் கொள்ளாத் துயரத்தில் ஏனோ அவள் அழுது விட்டாள்.

(தொடரும்)



''உங்க வீட்டுக்காரருக்குத் தூக்கத்திலே நடக் கிற வியாதியாமே?''

''அப்படி ஒண்ணுமில்லே... நடக்கிற போது தூங்கறார். அவ்வளவு தான்!''



# பின்னணிப் பாடகர் டி.எம். சௌந்தரராஜனின் கார் ரிஜிஸ்ட்ரேஷன் எழுக்கும் TMS

—ரேகா ராகவன்

# உங்கள் கற்பனைத் திறனுக்கு ரூ. 7000 பரிசு!

## சிறுகதை, சிறப்பு வாக்கியப் போட்டி

**தமிழ்நாடு அரசு சிறுசேமிப்புத் துறை — அமுதசுரபி**

**இணைந்து நடத்துகிறது.**




வருங்கால நல்வாழ்விற்காக ஒவ்வொருவரும் சேமிக்க வேண்டியதன் அவசியத்தை மக்களுக்கு விளங்கச் செய்வதே இப்போட்டியின் குறிக்கோள்.
சிறு சேமிப்பின் அவசியத்தை வலியுறுத்தும் கருத்தினைக் கருவாகக் கொண்டு, சிறு கதைகள் அமுதசுரபி இதழில் ஐந்து பக்கங்களுக்கு மேற்படாமல் இருக்க வேண்டும். மொத்தம் 9 கதைகளுக்குப்பரிசளிக்கப்படும்.

சிறப்பு வாக்கியப் போட்டி (Slogans):
சிறு சேமிப்பின் சிறப்பையும் அவசியத்தையும் நன்கு எடுத்துக் காட்டும் வகையில் சிறப்பு வாக்கியங்கள் (Slogans) தமிழில், ஆறு வார்த்தைகளுக்குள், அழகான அடுக்கு மொழியில் அமைந்திருக்க வேண்டும்.
**இதற்கு 6 பரிசுகள் அளிக்கப்படும்.**

**பரிசு விவரங்கள்:**

| | |
|---|---|
| முதல் பரிசு: | ரூ. 2,000 |
| இரண்டாவது பரிசு: ரூ. 750 வீதம் | ரூ. 1,500 |
| இரு மூன்றாவது பரிசுகள்: ரூ. 250 வீதம் | ரூ. 1,500 |
| ஐந்து ஆறுதல் பரிசுகள்: | ரூ. 1,250 |

சிறந்த சிறப்பு வாக்கியங்களுக்கு (Slogans):
ரூ. 125 வீதம் ஆறு பரிசுகள்: ரூ. 750

**முடிவு தேதி: 31.1.1980**
எக்காரணம் கொண்டும் முடிவு தேதி மாற்றப்பட மாட்டாது.

நடுவர்கள்:
"லக்ஷ்மி"
வசுமதி ராமசாமி
இரா.கிருபாகரன், ஐ.ஏ.எஸ்.
(இயக்குநர், சர்க்கரைத் துறை)
பி.கே. மாதவன்,
(சேர்மன், பாங்க் ஆப் தஞ்சாவூர் லிட்.)
ஆசிரியர், "அமுதசுரபி"

மற்ற விபரங்களை ராஜேந்திர குமார் எழுதும் தொடர் கதையுடன் வெளிவரும் புத்தாண்டு ஜனவரி '80 இதழில் காணலாம்.

அல்லது எழுதுக:

ஆசிரியர், 'அமுதசுரபி'
123, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை 600 001.
போன்: 37890, 28545

## நீங்காத நினைவு

# சமுதாய சீலம்

## மீ.ப.சோமு

வியாபார உலகில் 'கொள்ளை லாபம்' என்ற சொல் அடிக்கடி அடிபடுவதைக் கேட்கிறோம். இதைத் தடுப்பதற்கு அரசாங்கம் எத்தனையோ நடவடிக்கைகள் எடுத்து வருவதும் நமக்குத் தெரியும்.

ஆங்கிலேயர்களுடைய நாட்டில் நான் இருந்த போது ஒரு பண்பு என்னை மிகவும் கவர்ந்தது. ராஜாஜியும் இதை அடிக்கடி பாராட்டிச் சொல்லக் கேட்டிருக்கிறேன். அதாவது அவர்கள் ராஜ்யம், ராமராஜ்யம் என்று நான் சொல்ல வரவில்லை. கொள்ளைகள் திருடுகள், கொலை முதலிய குற்றங்கள் இருந்த போதிலும், அவர்களுடைய சமுதாய உணர்வு, சமுதாய சீலம் ஒரு முன்மாதிரியாகக் கொள்ள வேண்டிய நெறி முறையாகும் என்பது என் கருத்து. நம்மை ஆண்ட காலத்தில் பிரிடிஷ் மக்களின் தீய பழக்கங்கள் சிலவற்றை நாம் பழகிக் கொண்டுள்ள அளவுக்கு, அவர்களுடைய சமுதாயக் கட்டுப்பாட்டை நாம் கற்றுக் கொண்டோமா அல்லது அவர்கள் நமக்குக் கற்பித்தார்களா என்பது கேள்விக்குறியாகவே நிற்கிறது!

1960-ல் இங்கிலாந்தில் இருந்த போது நான் எழுதி வைத்துள்ள நாட் குறிப்புகளில் இரண்டு நிகழ்ச்சிகள் என் நினைவில் எப்போதும் நிலைபெற்று நிற்கின்றன:—

லண்டன் 3-8-60

விமான நிலையத்தின் சிற்றுண்டியிலுள்ள ''டீ'' கௌண்டரில், நின்று கொண்டே சாப்பிட்டு விட்டுச் செல்வதற்கான மேஜைக்கு எதிரே நின்று, என் நண்பர் டீ வரவழைத்தார். மேஜையின் மீதிருந்த பாட்டிலில் சீனியை எடுத்துப் போட்டுக் கலந்து ஒரு மடக்குக் குடித்தாரோ இல்லையோ, ''அடடா!'' என்றார். சீனி என்று நினைத்து அவர் டீயிலே எடுத்துப் போட்டுக் கொண்டது சீனி இல்லை, உப்புப் பொடி! மேஜையின் மீது உப்புப் பொடியும், சீனிப் பொடியும் தனித்தனியே வைத்திருக்கும் வழக்கம் நண்பருக்குத் தெரியும் என்றாலும், விமான நிலையத்தின் அவசரத்தில் இப்படி ஒரு ருசிகரமான தவறு — இரண்டு பொடியும் ஒன்று போலவே வெள்ளையாக இருந்ததால் — நேர்ந்து விட்டது! இதைப் பணியாளரிடம் சொன்னார். ஐந்து நிமிஷத்தில் இன்னொரு கப் டீ வந்தது. குடித்து விட்டு இரண்டு கப் டீக்குப் பணம் கொடுத்தார். விடுதிக்காரர் அதை எடுத்துக்கொள்ள மறுத்து விட்டார்.

''சீனிக்கும் உப்புக்கும் வித்தியாசம் தெரியாததால் நேர்ந்த இந்தத் தவற்றுக்கு நீங்கள் எப்படிப் பொறுப்பாளி? ஒரு கப்புக்குள்ள காசைத்தான் எடுத்துக் கொள்ளுவோம்!'' என்றார் விடுதியாளர் ஒரே கண்டிப்போடு!

இந்த நிகழ்ச்சியோடு சேர்த்துப் பார்க்க வேண்டிய இன்னொரு நிகழ்ச்சி அக்டோபர் மாதம் நடந்தது:

லண்டன். 10-10-60

ஐரோப்பிய யாத்திரையில் ஏற்பட்ட அலைச்சல் காரணமாக என்னுடைய பூட்ஸ்களில் ஒன்று ஒரு முனையில் கிழிந்து விட்டது. முனைத் தையலில் ஒரு சிறு விரிசல் விழுந்து விட்டது. லண்டனுக்குத் திரும்பியதும் நான் பூட்ஸ் வாங்கிய கம்பெனியின் ஒரு கிளைக்கடைக்கு (பி.பி.ஸிக்கு அருகில்) போய் அதை ஒக்கிட்டுத் தரும்படி கூறினேன்.

என்னுடைய பூட்ஸைப் பார்த்ததுமே தங்களுடைய கம்பெனியில் செய்த பூட்ஸ்தான் என்பதைத் தெரிந்து கொண்டு விட்டார் கடைக்காரர்.

''எப்பொழுது வாங்கினீர்கள்?''

''இரண்டு மாதங்கள் ஆகின்றன. வாங்கிய பிறகு ஐரோப்பா சென்றேன். பல மைல்கள் ஆல்ப்ஸ் மலைப் பாதைகளில் அலைந்திருக்கிறேன். தையல் விட்டு விட்டது!'' என்றேன்.

''கொடுத்து விட்டுப் போங்கள்!'' என்று வாங்கிக் கொண்டு எனது லண்டன் விலாசத்தையும் குறித்துக் கொண்டார்.

அந்த பூட்ஸ் தொழிற்சாலையின் தலைமை நிலையத்திலிருந்து நேற்று எனக்கு ஒரு கடிதம் வந்தது:

''உங்களிடம் நாங்கள் விற்பனை செய்த பூட்ஸ்களின் தையலில் ஏதோ குறைபாடு இருந்ததற்காக நாங்கள் மிகவும் வருந்துகிறோம். இந்தக் கடிதத்தோடு எங்கள் கம்

பெனியின் கிளைக் கடைகளில் எந்த ஒரு கடைக்கு நீங்கள் சென்றாலும், இதைக் காண்பித்து வேறு புதிய பூட்ஸுகள் பெற்றுக் கொள்ளலாம். எவ்விதப் பணமும் நீங்கள் கொடுக்க வேண்டியதில்லை. உங்களுக்கு நேர்ந்த இந்த அசௌகரியத்துக்கு வருந்துகிறோம். மன்னிக்க வேண்டும்!''

இன்று காலை இந்தக் கடிதத்தை எடுத்துக் கொண்டு பீ.பீ.ஸிக்கு அருகிலுள்ள கிளைக் கடைக்குப் போனேன்.

''பூட்ஸை ஒக்கிட்டுத் தருவதற்குத் தானே உங்களிடம் கொடுத்தேன். நீங்களானால் உங்கள் தலைமை நிலையத்துக்கே எழுதிப் புதிய பூட்ஸுகள் கொடுக்கும்படி ஏற்பாடு செய்து விட்டீர்களே!'' என்று கேட்டேன்.

''எங்கள் பூட்ஸுகள் ஒரு வருஷம் வரை உத்திரவாதம்! உங்களுக்கு நாங்கள்கொடுத்த பூட்ஸுகளில் ஏற்பட்ட விரிசலுக்குக் காரணம், எங்கள் தையலில் ஏதோ சிறு பிசகு நேர்ந்திருக்கிறது. எனவே புதிய பூட்ஸுகள் கொடுக்க வேண்டியது எங்கள் கடமை!'' என்றார் கடையின் நிர்வாகி!

# விட்டு விடுதலையாகி நிற்பாய்!

**கடந்த பத்தாண்டுகளாக மேற்கு ஜெர்மனியில் பெண்கள் விடுதலை இயக்கக் கருத்துக்களைத் திரைப்படம் மூலமாகப் பெண் இயக்குனர்களே வெளியிட்டு வருகிறார்கள். இவர்களுடைய படங்களில் எட்டு அண்மையில் மாக்ஸ் முல்லர் பவனில் காட்டப்பட்ட போது யுட்டா ப்ருக்னர் விளக்கம் தந்தார். இவர் இயக்கிய படங்கள் இரண்டும் திரையிடப்பட்டன.**

ராஜரங்கன்: பெண் விடுதலை பற்றிய படங்களை ஜெர்மனியில் பெண் இயக்குனர்களே தயாரிக்கணும் என்ற வேகம் ஏன் வந்தது?

ப்ருக்னர்: சமூகத்தில் பெண்களுக்கு நேருகின்ற கசப்பான அனுபவங்களைப் புரிந்து கொண்டு, அவர்களுடைய எதிர்ப்புக்கள், வெற்றி தோல்விகளைப் பற்றி சத்திய நோக்குடன் எடுப்பது ஒரு பெண் டைரக்டருக்கு இயல்பாகவே வருகிறது. சாதாரணமாக இங்கு திரையிடப்பட்ட எட்டு படங்களில் கிரிஸ்டினு பெரின்ஸியோனி எடுத்த ''ஆணின் சக்தி பெண்ணின் பொறுமைதான்'' என்ற படத்தைப் பார்த்திருப்பீர்கள். கணவனிடம் அடிக்கடி பொறுக்க முடியாத அடி வாங்கும் ஒரு பெண் தன் குழந்தையுடன் வெளியேறி ஒரு பெண்டிர் விடுதியில் போய்ச் சேருவதைப் பற்றிய கதை இது. சமூகப் பிரக்ஞையுள்ள சில சேவை நிறுவனங்கள் நடத்தும் இந்த விடுதியில் பெர்லினில் மட்டும் ஓர் ஆண்டுக்கு 1200 பெண்கள் தங்களுடைய 1800 குழந்தைகளுடன் வந்து தங்குகிறார்கள். சமூகத்தின் அடித்தளத்தில் இருக்கும் இந்தப் பெண்களுக்குச் சட்டபூர்வமான விவாக ரத்து கிடைக்க வெகு நாளாகிறது. செலவு அதிகம். மறுவாழ்வு வரை அவர்களுக்குப் புகலிடம் அளிக்கிறது இந்த விடுதி. இந்த மையக் கருத்தை வைத்து யதார்த்தமாக எடுக்க ஒரு பெண் டைரக்டரால்தானே முடியும்?



ரா: இந்தத் திரைப்பட விழாவில் காட்டப்பட்ட எட்டுப் படங்களின் செய்தியுமே பெண் ஆணால் அடக்கப்பட்டு, அநீதி இழைக்கப்படுவதுதானா?

ப்ரு: எங்களைப் பொறுத்தவரையில் ஒரு பெண்ணின் ஆசாபாசங்களை, குறைவு நிறைவுகளை அவள் கண்ணோட்டத்தில் யதார்த்தமாகத் தருவதுதான் நோக்கம்.

ரா: பெண்கள் கொடுமைக்கு உள்ளாகும் நிலை மாற என்ன மாற்றங்கள் தேவையாயிருக்கும்?

ப்ரு: சமுதாய ஒப்பந்தங்களில் ஏற்கனவே சில பரிசோதனைகள் நடைபெறுகின்றன. ஆண்தான் சம்பாதிப்பவன், பெண் குடும்பம் நடத்துபவள் என்ற சமூகப் பிரக்ஞை மாறி, ஜெர்மனியில் இரண்டு பெண்களே இணைந்து குடும்பம் நடத்துவதைப் பற்றிய படம் ஒன்றைப் பார்த்தீர்கள். சம்பாத்தியம், குடும்ப உறவுகள், இலக்கிய ரசனைகள், ஒய்வை அனுபவித்தல் இத்தனையிலுமே பெண்ணை ஒரு யந்திரமாக இல்லாமல் மனிதத்துவம் நிரம்பிய சிருஷ்டியாகக் காண்பிப்பது இந்தப் படங்களின், அவற்றை எடுத்த பெண் டைரக்டர்களின் குறிக்கோள்.

ரா: ஆண்கள் சார்பில் ஒரு கேள்வி. இந்தப் படங்களில் எல்லாமே ஆணைக் குரூரமாகவும், ஏளனத்துக்கும் கண்டனத்துக்கும் உரியவனாகவுமே சித்திரிக்கலாமா? ஆண்களிலே மிருதுவான, விரும்பத்தக்க, அன்பு நிறைந்தவர்களோ இல்லையா?

ப்ரு: வாழ்க்கையில் நிச்சயமாக நீங்கள் சொல்கிற மாதிரி மனிதர்கள் இருக்கிறார்கள். நானும் சந்தித்திருக்கிறேன். ஆனால் ஜெர்மனிப் படத் துறையில் தொண்ணூற்றெட்டு சதவிகிதம் இதுபோன்ற வாழ்க்கையைக் காட்டியாகி விட்டது. ஆகவேதான் பெண்களின் நோக்கில் கொடூர சித்தம் கொண்ட ஆண் வர்க்கத்தைக் காண்பிக்க வேண்டியிருக்கிறது! நல்லவர்களைப் பற்றிப் பிரச்னை இல்லையே, கொடியவர்களைத் திருத்துவது தானே கடமையாகிறது! பேட்டி: **ராஜ. ரங்கன்**

# கடல் ராணி



## சாண்டில்யன்

அத்தியாயம் 22

### எதிர்பாராத விந்தை

மூந்திய இரவு திடீரென உருவான பயங்கரப் புயல் தோன்றிய வேகத்தில் தணிந்து விட்டதாலும், ஒருவர் முகத்தை இன்னொருவர் பார்க்க விடாமல் திரையிட்டுப் பிராணனை வாங்கும் அரபிக் கடலின் மூடுபனியும் அன்று கதிரவனுக்கோ அல்லது கொள்ளைக்காரர்களுக்கோ பயந்து விலகி விட்டதாலும், காலைண்ட்ராவின் விசாலமான தளத்தில் கதிரவன் தனது காலைக் கிரணங்களைப் பரிபூர்ணமாக வீசியிருந்ததாலும், கொள்ளைக்காரர்கள் கூடவும், பேசவும் தளம் மிக வசதியுடனிருந்தது. டெய்லர் முதலிய கொள்ளைத் தலைவர்களும் ராணி, அனந்த், மால்வான் தளபதி இவர்களும் உட்கார மாலுமிகள் அறைகளிலிருந்து கொண்டு வந்து போட்டிருந்த மூன்று நாற்காலிகளும், தட்டையான சின்னஞ் சிறு ஆசனங்களும் காலை வெயிலில் குளிர் காய்ந்ததால் அதிக சில்லிப்பு அவற்றைப் பாதிக்காமல் உட்கார மிகவும் சுகமான உஷ்ண ஸ்திதியை அடைந்திருந்தன. அவற்றை விட அதிக உஷ்ண நிலையை டெய்லர், இங்க்லண்ட் முதலானவர் அடைந்திருந்தாலும் அதை வெளிக்குக் காட்டாமல் இரண்டு நாற்காலிகளில் அமர்ந்திருந்தனர். அவர்களைச் சூழ்ந்து நின்ற கப்பலின் மாலுமிகள் அத்தனை பேரும் தங்கள் தலைவர்களை விட அனந்தையும் ராணியையுமே அதிகமாக எதிர்பார்த்திருந்ததாலும் அவர்கள் வரத் தாமதப்பட்டதாலும் அவர்களுக்குள் ஏதோ சிறிது 'கசமுச' என்ற பேச்சும் சலசலப்பும் இருந்து வந்தன.

காப்டன் டெய்லரும் காப்டன் இங்க்லண்டும் நாற்காலிகளில் அமர்ந்திருந்தபோதிலும் வில்வர் மட்டும் எந்த ஆசனத்திலும் அமராமல் எட்ட இருந்த பாய்மரமொன்றில் சாய்ந்து நின்று தனது கையிலிருந்த அகரக்கிளியைத் தடவிக் கொண்டிருந்தான். சற்று நேரத்துக்கெல்லாம் அழைத்து வரப்பட்ட மால்வான் தளபதி சங்கர்பந்த் ஒரு சிறு ஆசனத்தில் அமரும்படி இங்க்லண்டால் நியமிக்கப்பட்டதால் தமக்கு உரிய மரியாதை கொடுக்கப்படவில்லை என்ற காரணத்தால் அவர் மிகுந்த வெறுப்பையும் சினத்தையும் முகத்தில் படர விட்டுக் கொண்டு உட்கார்ந்தார். அவரை அழைத்து வந்த இரு கொள்ளைக்காரர்கள் அவர் உட்கார்ந்ததும் விலகிவிட்டாலும், அடுத்து வந்த துலாஜி ஆங்கரே மட்டும் அவருக்குப் பின்னால் வந்து, கூன் முதல் நாளைவிட அதிகமாக வளைய முகம் தாழ்ந்து முகவாய்க்கட்டை தளபதியின் தலையைத் தொட்டுவிடுவது போல் வெகு அருகில் நின்றான், கால்களை அகல விரித்துத் தன்னைத் திடப்படுத்திக் கொண்டு.

இத்தனை பேரும் வந்ததும் ராணியோ, அனந்தோ தலை காட்டாததால் மாலுமிகளில் ஒருவன் கூட்டத்தின் ஒரு கோடியிலிருந்து ''ராணி எங்கே?'' என்று சற்று இரைந்தே கேட்டான்.

''ஆம் எங்கே?'' இன்னொருவன் குரல் மிகக் கரகரப்பாகவும் கொடுமையாகவும் எழுந்தது.

''நடை பாவாடை விரிக்காவிட்டால் மகாராணி வரமாட்டார்கள்'' என்று மற்றொருவன் கேலியாக நகைத்தான். அதைத் தொடர்ந்து கூட்டமே நகைத்தது மிகக் கேவலமாக.

கொஞ்சம் கொஞ்சமாகக் கொள்ளைக்காரர் அமைதி இழப்பதைக் கண்ட இங்க்லண்ட் முகத்தைச் சுளித்தான். டெய்லர் ''யாராவது இருவர் சென்று அவளை இழுத்து வாருங்கள்'' என்று கூறினான்.

அதற்கு அவசியமில்லாமல் காப்டன் இங்க்லண்டின் அறைக் கதவைத் திறந்துகொண்டு ராணி வெளியே வந்தாள். வந்தவள் கதவின் பக்கத்திலேயே சிறிது நேரம் நின்றாள். அன்று அவள் அலங்காரம் மிக மனோகரமாக இருந்ததால் அதுவரை கூச்சலிட்ட மாலுமிகள் சட்டென்று அடங்கி வாயைப் பிளந்து அவளைப் பார்த்தார்கள். இயற்கையாகவே பளபளப்புள்ள அவள் அழகிய மேனிக்குக் கதிரவன் காலைக் கிரணங்களால் சிறிது செஞ்சாந்து பூசியிருந்தான். குவளை மலரைப் போன்ற அவள் அழகிய முகம் கதிரவன் கிரணங்களால் மலர்ந்தும் சிவந்துமிருந்ததன்றிக் குவளையிலே நீலோத்பலங்களும் விளையலாம் என்பதற்கு இரு நயனங்கள் சான்று கூறின. அவள் செம்பவள உதடுகள்

காலைக் கிரணங்களில் பளபளத்ததால் ஏதோ நீரோட்ட முள்ள செம்பு ஒளிவிடும் நிலையை அடைந்திருந்தன. அந்தப் பவள உதடுகளில் அன்று காலையில் சிறிது புன் முறுவலும் தவழ்ந்து இருந்ததை இரு காப்டன்களும் பார்த்தார்கள். அதுவரை அவள் மீதிருந்த கோபமெல் லாம் ஏற்கெனவே மறைந்து விட்ட பனியைப் போல் விலகி விடவே காப்டன் இங்க்லண்ட் தனது நாற்காலியி லிருந்து எழுந்திருந்து ஹாட்டைக் கையிலெடுத்துக் கொண்டு தலை தாழ்த்தினான். டெய்லர் மட்டும் அசைய வில்லை. உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து கழுத்தை லேசாகத் திருப்பி அவளைப் பார்த்ததோடு நிறுத்திக் கொண்டான்.

அடுத்து அவள் மாலுமிகள் இருந்த இடத்தை நோக்கி நடந்து வந்தபோது மாலுமிகள் கூட்டம் இரண் டாகப் பிளந்து அவளுக்கு வழி விட்டது. அவள் நடக்கத் தொடங்கிய உடனேயே அறையிலிருந்து வெளிவந்த அனந்த் அவளை மிக நெருங்கி அவளுக்குப் பின்னால் நடந்து வந்தான். இருவரும் டெய்லரும் இங்க்லண்டும்



இருக்கும் இடத்துக்கு வந்ததும் இங்க்லண்ட் தனது நாற் காலியை ராணிக்கு அளித்து, ''இப்படி உட்காரலாம்'' என்றான். நாற்காலியைச் சிறிது இழுத்து ராணி உட்கார வசதியும் அளித்தான்.

ராணி சுற்று முற்றும் ஒரு முறை தனது கண்களை ஓட்டினாள். பிறகு ராணி போலவே கம்பீரமாக அமர்ந்தாள், இங்க்லண்டின் நாற்காலியில். அந்தச் சமயத்தில்தான் வாயைத் திறந்து பேசினான் டெய்லர். ''அனந்த்! இந்த நாற்காலியில் நீ உட்கார லாம்'' என்று ஆரம்ப முதல் காலியாக வைக்கப்பட்ட நாற்காலியைக் காட்டினான். அதைச் சொன்ன அவன் குரல் விபரீதமாக ஒலித்தது.

அனந்த் உடனடியாக அதில் உட்கார வில்லை. ''காப்டன் இங்க்லண்ட் நிற்கும் போது நான் உட்காருவது முறையல்ல'' என்று கூறி மறுத்தவன், ''காப்டன்! யூ ப்ளீஸ் டேக் த சேர்'' என்று ஆங்கிலத்திலும் சொன்னான்.

காப்டன் இங்க்லண்ட் பதில் சொல்ல வில்லை. டெய்லர் இதழில் குரூரமான புன்னகை ஒன்று விரிந்தது. ''இட் ஈஸ் இன்டட் பார் யூ (இது உனக்காக ஏற்பட் டது)'' என்று அந்த நாற்காலியைக் கையால் தட்டியும் காட்டினான்.

அனந்தின் இதழ்களில் புன்முறுவல் தவழ்ந் தது. அத்துடன் அந்த நாற்காலியை உற்று நோக்கினான். அப்படி யொன்றும் அந்த நாற்காலி பிரமாதமான வேலைப்பாடு உடைய தல்ல. நல்ல அகலமான தட்டையான நான்கு கால்கள், பின்னால் சாய்ந்துகொள்ளப் பாசி பிடித்த அழுக்கேறிவிட்ட இரண்டு சட் டங்கள், முரடான, பட்டையான இரண்டு கைகள் இவற்றின் ஒரு தொகுப்புத்தான் அந்த நாற்காலி. நாகூக்கான வாழ்க்கைக்கு உத வாதது. ஆனால் கடலோடும் கப்பல்களுக்கு, சீதோஷ்ண ஸ்திதியின் மாறுட்டங்களுக்கு ஈடு கொடுக்கும் உரம் வாய்ந்தது. அந்த நாற் காலியில் பார்க்கும்படியானது எதுவுமில்லா விட்டாலும் அனந்த் அதை உற்றுப் பார்த் தான்.

அனந்தின் பார்வையையும் நாற்காலியின் ஆராய்ச்சியையும் டெய்லர் கவனிக்கவே செய்தான். ஆகையால் மீண்டும் சொன் னான், ''இந்த நாற்காலி உனக்காகவே போடப்பட்டிருக்கிறது'' என்று.

அதுவரை மௌனமாயிருந்த அனந்த் இங்க்லண்டை நோக்கி வினவினான்: ''இந்த நாற்காலியைக் கொண்டு வந்து போடும்

யோசனை யாருடையது? உன்னுடையதா?'' என்று.

இங்கலண்ட் பதில் சொல்லவில்லை. இல்லையென்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் அசைத்தான். ''ஐ தாட் ஸோ (அப்படித்தான் நினைத்தேன்'' என்ற அனந்த் டெய்லரை நோக்கி, ''டெய்லர்! பர்ஹாப்ஸ் இட் ஈஸ் யுவர் ஐடியா? (டெய்லர் ஒருவேளை இது உன் யோசனையோ?'')என்று வினவினான்.

டெய்லர் உடனடியாகப் பதில் கூறவில்லை. சில விநாடிகளுக்குப் பிறகு ''ஸப்போஸிங் இட் ஈஸ், வாட் ஈஸ் தேர் இன் தட் சேர்? (அப்படியே இருந்தாலும் இந்த நாற்காலியில் என்னதான் இருக்கிறது?)'' என்று வினவினான்.

அனந்த் சொன்னான்: ''அதோ அந்த இரண்டு எழுத்துக்கள் இருக்கின்றன.''

''இருந்தாலென்ன?'' காப்டன் டெய்லர் இறுமாப்புடன் கேட்டான்.

''அந்த இரண்டு எழுத்துக்களும் இந்தக் கப்பலின் ஆரம்ப காப்டனுக்கு உரியவை. தோஸ் டு லெட்டர்ஸ் ஜே அண்ட் எம் டெல் எ ஸ்டோரி (அந்த இரண்டு எழுத்துக்கள் ஜே. எம். ஒரு கதையைச் சொல்கின்றன.)'' என்றான் அனந்த். அவன் குரல் சிறிது கடுமைப்பட்டிருந்தது.

அந்தக் கடுமையை டெய்லர் கவனித்தானும் கவலைப்படவில்லை. ''வாட் ஸ்டோரி? (என்ன கதை?)'' என்று கேட்டான்.

''ஸ்டோரி ஆப் யுவர் இன்டென்ஷன்ஸ் தென் அண்ட் யுவர் இன்டென்ஷன்ஸ் நௌ (உன் எண்ணத்தைப் பற்றிய கதை—அன்றும் இன்றும்.)'' என்றான் அனந்த். அப்படிச் சொன்ன பிறகு அவன் அந்த நாற்காலியை நோக்கி நடந்து அதில் உட்கார்ந்துகொண்டான் திடமாக. உட்கார்ந்து கொண்டு கேட்டான் இங்கலண்டை, ''இங்கலண்ட்! இந்த நாற்காலியின் சரித்திரத்தைச் சொல்லட்டுமா?'' என்று.

அவன் பதிலுக்குக் காத்திராமல் இந்திரஜித் தானாகவே பேச ஆரம்பித்தான். அவன் சிந்தனை பின்னோக்கி ஓடியதால் கண்களில் கனவுச் சாயை படர்ந்தது. அவன் கைகள் அந்த நாற்காலியின் இரு கைகளையும் ஒரு முறை ஓங்கிக் கடுமையாகத் தட்டின. ''இதே நாற்காலியில் நான்கு வருஷங்களுக்கு முன்பு இந்த நாற்காலிக்கு உடையவன் காப்டன் ஜேம்ஸ் மாக்ரே பிணைக்கப்பட்டிருந்தான். கவர்னர் பூன், கனோஜி ஆங்கரேயை அழிக்கத் திட்டிய பைத்தியக்காரத் திட்டத்தின் விளைவாக உபயோகப்படுத்தப்பட்ட மிகப் பெரிய கப்பல் இந்தக் காஸண்ட்ரா. இந்தக் கப்பலின் தலைவன்தான் ஜேம்ஸ் மாக்ரே. அவன் எதற்காகத் தனது பெயரின் முதல் எழுத்துக்களை ஜே. எம். என்று இந்த நாற்காலியில் வெட்டினான் என்பது எனக்கே புரியவில்லை. இதென்ன பெரிய அதிர்ஷ்டம் வாய்ந்ததா? வேலைப்பாடுள்ளதா? இரண்டும் இல்லை. இருப்பினும் இதைப் பெரிதாக மதித்திருக்கிறான் காப்டன் மாக்ரே. அவன் மதிப்பில் மண்ணைப் போட முயன்றான் டெய்லர். அவன் கப்பலையும் பிடித்துக் கொண்டு, அவன் நாற்காலியிலேயே அவனைப் பிணைத்து இதே தளத்தில் உட்கார வைத்தான். அவனைத் தூக்கிலிடவும் தீர்மானித்தான். இத்தனைக்கும் டெய்லர், காப்டன் மாக்ரே மீது அடைந்தது பெருமைக்குரிய வெற்றியல்ல...'' என்று பேசிக் கொண்டு போன அனந்த் சிறிது நிறுத்தினான்.

அந்தச் சமயத்தில் இடை புகுந்தான் டெய்லர். ''அந்தப் போரைப் பற்றி உனக்கு என்ன தெரியும்? அந்த வெற்றியைப் பற்றித்தான் என்ன தெரியும்?'' என்று சீறினான்.

''அந்தப் போர் சரித்திரப் பிரசித்தி பெற்றுவிட்டது. சமீப காலத்தில் அத்தகைய பேடித்தனத்தை கவர்னர் பூனின் மாலுமிகளைவிட வேறு யாரும் காட்டியதில்லை. டெய்லர்! ஐ நோ எவ்விதிங் அபௌட் தட் ஆக்ஷன். அண்டு ஐ நோ இட் ஈஸ் ஜஸ்ட் பைலக் யூ காட் மாக்ரே (டெய்லர் அந்தச் சண்டை பற்றி எனக்குச் சகலமும் தெரியும். வெறும் அதிர்ஷ்டத்தால் நீ மாக்ரேயைப் பிடித்தாய் என்பது எனக்குத் தெரியும்)'' என்றான் அனந்த்.

அனந்த் மேலும் சொன்னான்: ''க்ரீன்விச் என்ற கம்பெனி காப்டன் கிர்பியும், காஸண்ட்ரா காப்டன்ஜேம்ஸ்மாக்ரேயும் ஜோஹன்னா ரோட்ஸ் என்ற துறைமுகத்தில் தங்கள் கப்பல்களுக்குக் குடிநீர் நிரப்பிக் கொண்டிருந்தார்கள். பிரெஞ்சு நாட்டில் கட்டப்பட்ட 46 பீரங்கிகள் உள்ள விக்டரி என்ற கப்பல் எட்வர்ட் இங்கலண்ட் என்ற கொள்ளைக்காரன் தலைமையிலும், டச்சுக்காரர் கட்டிய பான்ஸி என்ற 24 பீரங்கிக் கப்பல் டெய்லர் என்ற கொள்ளைக்காரன் தலைமையிலும் வழியில் இருப்பதாக மாக்ரேக்கு அங்கு தெரிய வரவே அவன் அவ்விருவரையும் பிடிக்கத் தீர்மானித்தான். அதற்காக கிரீன்விச்சையும் அருகே இருந்த இன்னொரு ஆஸ்டெண்டர் என்ற கப்பலையும் துணைகொண்டு இரு கொள்ளைக்காரர்களையும் நாடி வந்தான். கொள்ளைக்காரர்கள் கப்பலைக் கண்டதும் கிரீன்விச் காப்டனும் ஆஸ்டெண்டர் காப்டனும் ஓடிவிட்டார்கள். தனியாக மாட்டிக் கொண்டாலும் மாக்ரேயின் தலைமையில் காஸண்ட்ரா திறமையுடன் போரிட்டது. ஆனால் பிரிட்டிஷ் மாலுமிகள் உதறலெடுத்து

---

''சிக்னலில் வரிசை வரிசையாக பஸ்கள், ஸ்கூட்டர்கள், டாக்சிகள் நிற்கும்போது சிறு இடைவெளிகளில் கூட வளைந்து வளைந்து முன்னால் வந்து நிற்கும் ஆட்டோ டிரைவர்களுக்குப் புதுமாதிரியான தண்டனை வழங்கலாம். நூறு ஊசிகளில் ஒரு நிமிடத்திற்குள் நூலைக் கோக்க வேண்டும் என்ற தண்டனையை வழங்கலாம்.



கல்கி காரியாலயத்தைச் சேர்ந்த **ஸ்ரீ கே. வெங்கட்டராமன்** அவர்களுக்கு டிசம்பர் 10ந் தேதியன்று சென்னையை அடுத்த ஆதம்பாக்கம் நகரில் ஸ்ரீ வேத வியாச கல்யாண மண்டபத்தில் **சஷ்டியப்த பூர்த்தி** விமரிசையாக நடைபெற்றது. உறவினர்களும், நண்பர்களும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.



ஒத்துழைக்காததால் கொள்ளைக்கார மாலுமிகள் தங்கள் கப்பல்களின் குண்டு வீச்சின் பாதுகாப்பில் விரைந்து படகுகளில் வந்து காஸண்ட்ரா மீது தொத்திக்கொண்டார்கள். காஸண்ட்ரா மாலுமிகள் பலர் கண்ட துண்டமாக வெட்டப்பட்டார்கள். காப்டன் மாக்ரே தனது கப்பலிலேயே சிறை செய்யப்பட்டு இதே நாற்காலியில் கட்டப்பட்டான்...''

''அடுத்து நடந்தது என்ன?'' தூரத்திலிருந்து வந்தது வில்வரின் குரல்.

''டெய்லர் மாக்ரேயைத் தூக்கிலிட வேண்டுமென்றான். இங்கலண்ட் ஆட்சேபித்தும் கேட்கவில்லை. வில்வர்! நீ வந்து உன் கைத்துப்பாக்கிகளைக் காட்டி மிரட்டியிருக்காவிட்டால் மாக்ரே தூக்கிலாடியிருப்பான். டெய்லர் மிகக் குரூரமானவன். அதனால்தான்....'' என்ற அனந்த் இங்க்லண்டை நோக்கினான்.

இங்கலண்டின் முகம் கல்லாயிருந்தது. டெய்லர் நகைத்தான். ''யூ ஹாவ் நாட் கம்ப்ளீடட் த ஸெண்டன்ஸ் (நீ வாசகத்தைப் பூர்த்தி செய்யவில்லை)'' என்றான் நகைப்பின் ஊடே.

''பூர்த்தி செய்கிறேன். அதனால் தான் இந்த நாற்காலியில் என்னை உட்கார வைத்திருக்கிறாய். மாக்ரேயைப் போல் என்னையும் பிணைத்து மிரட்டவும் தூக்கில் தொங்கலாட வைக்கவும் எண்ணுகிறாய். பட் யூ ஹாவ் மேட் ஒன் மிஸ்டேக். (ஆனால் நீ ஒரு தவறு மட்டும் செய்திருக்கிறாய்.)'' என்று கூறிய அனந்த் உக்ரமாக நகைத்தான்.

''வாட் ஈஸ் இட்? (என்ன அது?)'' டெய்லரின் குரலில் நகைப்பு மறைந்து உக்கிரம் நிலவியது.

''நான் மாக்ரேயல்ல என்பதை நீ உணரவில்லை. நானும் உன்னைப் போல் ஒரு கொள்ளைக்காரன். அது மட்டுமல்ல. நான் இஷ்டப்பட்டால் இந்தக் கப்பலில் உன்னைத் தூக்குப் போட்டுவிட முடியும்'' என்று அனந்த் மீண்டும் நகைத்தான்.

அவன் நகைப்பு விபரீதமாகத் தோன்றியது ராணிக்கு. இங்கலண்டின் நிலை விவரிக்க இயலாததாயிருந்தது. அவன் சொன்னான் ''இம்முறை உன் உதவிக்கு வில்வர் வர மாட்டான்'' என்று.

''யார் உதவியையும் நான் எதிர்பார்க்கவில்லை. என் உதவி உங்கள் எல்லோருக்கும் தேவை'' என்று சொன்ன அனந்த் நாற்காலியில் நன்றாகச் சாய்ந்து கொண்டான். ''இப் எனி ஆப் யூ டச் மீ ஐ வில் டர்ன் திஸ் ஷிப் அண்ட் ஆல் ஆப் யூ வித் இட் (உங்களில் யாராவது என்னைத் தொட முயன்றால் இந்தக் கப்பலை உங்களுடன் சேர்த்துக் கொளுத்தி விடுவேன்.)'' என்று மிரட்டினான். ''என்னால் முடியுமா முடியாதா என்பதை அறிய விரும்பினால் அவளைக் கேளுங்கள்'' என்று எதிரே கையை நீட்டினான்.

அவன் கை நீட்டிய திசையை அனைவரும் கவனித்தார்கள். கவனித்ததும் பிரமித்தார்கள். அவர்கள் முற்றும் எதிர்பாராத விந்தை நிகழ்ந்திருந்தது. (தொடரும்)

# ஸ்கைலாப் சம்பந்தி

**வி**ண்வெளி விஞ்ஞானப் பரிசோதனைகளுக்குப் பெரிதும் உதவிய ஸ்கைலாப் கடைசியில் அனைவரையும் அச்சுறுத்திய போதிலும் யார் தலையிலும் விழாமல் சாதுவாக விளங்கியது போல, ஸ்கைலாப் சம்பந்தியும் தாட்பூட்டென்று எல்லோரையும் மிரட்டினாலும் இறுதியில் நன்மையே செய்கிறார்.

எதிர்பாராத விதமாக ஜாதகம் மாறிப் போகிறது. மாறிப்போன ஜாதகம் பொருந்தவும் செய்கிறது. அதிலிருந்து குழப்பமும், மனஸ்தாபங்களும், கவலைகளும் துயரங்களும் பெருகுகின்றன. ஸ்கைலாப் சம்பந்தியோ அமர்க்களப்படுத்துகிறார். ஆனால் அவர் ஒழித்த கோட்டைத் துணிந்து தாண்டி வரும் மகன் கருணையும் கனிவும் கொண்ட உள்ளத்துடன் ஜாதகப் பொருத்தத்தைவிட மனப் பொருத்தம் முக்கியம் என்று உணர்த்துகிறான்.

சந்துரு, ஷோபா, மாஸ்டர் ஸ்ரீராம், கூத்தபிரான், ஜெமினி மகாலிங்கம் முதலிய நமக்கு நன்கு பரிச்சயமான நடிகர்கள், 'ஸ்கைலாப் சம்பந்தி'யை விண்வெளிக்கு உயர்த்தாவிட்டாலும் சராசரி நாடகங்களிலிருந்து மிக உயரே கொண்டு போகிறார்கள். கே. எஸ். நாகராஜன் தமது திறமையான டைரக்ஷனால் நாடகத்தில் எங்குமே தொய்வு ஏற்பட்டுவிடாமல் கவனித்துக் கொள்கிறார்.

எளிய கதையை அன்றாட வாழ்வில் நடக்கிற இயல்பான சம்பாஷணைகளால் வளர்த்துப் போகிறார் மௌலி. அவருக்கு இது கைவந்த கலையாகி விட்டது. ரசிகர்களுக்கும் பிடித்துப் போய்விட்டது. பிறகென்ன? இதுவும் அவரது மற்ற நாடகங்களைப் போல் செஞ்சுரி போட வேண்டியதுதானே! குட்லக்!

— குட்டி கிருஷ்ணன்



✖ எஸ். எஸ். டி. ராஜன், சிறுதையூர்

கே. மிருகங்களின் தோல்கள் விலை போகிறது. ஆனால் மனிதனின் தோலுக்கு மட்டும் மதிப்பு இல்லையே?

ப: செடிகளை நம்பி மிருகங்கள் உள்ளன. செடி, மிருகங்கள் ஆகியவைகளை நம்பி மனிதன் இருக்கிறான். ஆனால் மனிதன், தான் மிகவும் இன்றியமையாதவன் என்று நினைத்துக் கொள்கிறான். பரந்த உலகில் உள்ள பல ஜீவராசிகளையும் செடி கொடிகளையும் பார்க்கும்போது மனிதன் எத்தனை குறைபாடுகள் உள்ளவன் என்பது நிதர்சனமாகிறது. மனிதனின் தோல் மதிப்பு இல்லாமல் இருப்பது வியப்புக்குரிய விஷயம் இல்லை.

✖ தங்கவேலன், நெல்லிக்குப்பம்

கே. என்ன புத்தகம் சார் படித்துக் கொண்டிருக்கிறீர்கள்?

ப: ஆர்ச் புச்வால்ட் என்ற அமெரிக்க நகைச்சுவை எழுத்தாளர் எழுதிய புத்தகங்கள் எல்லாவற்றையும் வாங்கிக் கிட்டத்தட்ட ஆயிரம் கட்டுரைகளை ஒரே மூச்சில் படித்தேன். இவர் 4500 கட்டுரைகளுக்கு மேல் எழுதியிருக்கிறாராம். அபாரமான நகைச்சுவை, கிண்டல் இந்த மாதிரி நம் நாட்டில் எழுத முடியாது. காரணம், நகைச்சுவைக்காகக் கிண்டலாக எழுதினால் கூடப் பலருக்கு 'சுர்' என்று கோபம் வரும்.

✖ ல. செங்குட்டுவன், வேலூர்

கே. மிருகமாக மனிதன் ஏன் மாறுகிறான்?

ப: மிருகங்களிடம் உள்ள நல்ல பழக்கம், பண்பாடு ஏதாவது அவனை உயர்த்தும் போது.

✖ ஆ. நரசிம்மன், திருச்செந்தூர்

கே. கேள்வி-பதில் எழுதுபவர்களில் யார் சிறப்பாகப் பதிலளிக்கிறார்?

ப: என்னை மண்டைக் கனம் பிடித்தவன் என்று சொல்வதற்காகவே இந்தக் கேள்வியைக் கேட்டிருக்கிறீர்கள். அவ்வளவு ஏமாந்த ஆசாமி அல்ல நான். ஆகவே, பதில் தரப் போவதில்லை.

✖ பி. சின்னக்கண்ணன், கோபி

கே. தமிழில் 3000க்கும் மேற்பட்ட கையெழுத்துப்பத்திரிகைகள் உலா வருவதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

ப: இத்தனை 'ஆசிரியர்'களுக்கா அச்சில் வரும் பத்திரிகைகள் சான்ஸ் தரவில்லை என்று!

✖ ஜி. ஆர். கணபதி, திருச்சி-4

கே. குமரி அனந்தன் உங்களை எங்ஙனம் கவர்ந்தவர்?

ப: இலக்கியத்தரமாகப் பேசுவதால், எளிமையுடன் பழகுவதால், சேவையில் நாட்டம் உடையவராக இருப்பதால்.

✖ ஆர். கே. லிங்கேசன், மேலகிருஷ்ணன் புதூர்

கே. ஷேக்ஸ்பியரிடம் நகைச்சுவை எழுத்தாற்றல் போதிய அளவு உண்டா?

ப: சமீபத்தில் சிலேடைகள் பற்றி 'அபான் தி பன்' என்ற புத்தகம் படித்தேன். அதில் காணப்பட்ட தகவல்: ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் மொத்தம் 1032 சிலேடைகள் இடம் பெற்றிருக்கின்றன. ஷேக்ஸ்பியர் முழுக்க முழுக்க நகைச்சுவையாளர் இல்லை. ஆனால் அந்தத் திறமையும் அவருக்கு உண்டு.

---

✖ டி. எஸ். சீதாராமன், கும்பகோணம்

கே. திசை மாறிய பறவைகள் குமுதினி, எழுத்தாளர் குமுதினி இருவரும் ஒருவர் தானா?

ப: 'திசை மாறிய பறவைகள்' படம் ஔவையார் வாழ்க்கை வரலாறா? படம் பார்க்காததால் கேட்கிறேன்!

✖ மிஸ். வேதா, குரோம்பேட்டை

கே. நாடு இன்றிருக்கும் நிலையில் திருமணங்களில் விருந்து அவசியமா?

ப: நாடு இன்றிருக்கும் நிலைமையில் திருமணங்கள் அவசியமா என்று முதலில் யோசிக்கப்பட வேண்டும்?

✖ இரா. விவேகானந்தன், போர்ட்பிளேயர்

கே. உம்மைச் சம்பந்தப் படுத்தி வரும் கேள்விகளைக் பொறுக்கி எடுத்துப் பரிசு வழங்குகிறீரே, இதன் மர்மம் என்ன?

ப: மர்மம் எதுவுமில்லை என்பது உங்களுக்குப் பரிசு கிடைக்காததி லிருந்து வெளிப்படுகிறதல்லவா?

ரூ. 5 பரிசு பெறுபவர்:

**ஆர். கே. லிங்கேசன்**
**மேலகிருஷ்ணன் புதூர்,**
**பள்ளம் போஸ்ட் (கன்னியாகுமரி)**



# இரவு இனிதாகட்டும்!

எங்கெங்கும் இருள் சூழ்கிறது...!
கோ-ஆப் டெக்ஸ் ஒளி
அப்போதும் மங்குவதில்லை; மாறாக
ஒளிவீசித் திகழ்கிறது.
பள பளக்கும் லுங்கிகள்...
பளிச்சிடும் சேலைகள்...
பைஜாமாக்கள்...
இதோ! உலகமே உறக்கம் கொள்ளும் நேரம்...
கோ-ஆப் டெக்ஸ் படுக்கை விரிப்புகள்...
தலையணை உறைகள்...
'கண்ணுறக்கம் கொள்வீர்' என்று
காத்துக் கிடக்கின்றன!

சிறப்புத் தள்ளுபடி
**20%**
1-1-80 முதல்
15-1-80 வரை



**கோ-ஆப்டெக்ஸ்**
கைத்தறி

ELEGANT

# ஒரு சிவன் கோயில்

## நான் கண்ட ரஷ்யா அகிலன்



ரஷ்யச் சிரிப்பு

## 14. அஜர்பைஜானில் ஒரு சிவன் கோயில்

**1979** ஜூலை முதல் நாள். பாகுவின் ஓட்டல் மாஸ்கோ.

காலையில் எழுந்து குளித்து முழுகி விட்டு, பழைய பாகூ நகரத்திலுள்ள ஸ்ரீவான்ஷா கலிலுல்லா என்ற அரசரின் பதினைந்தாம் நூற்றாண்டு அரண்மனையைக் காணப் புறப் பட்டுக் கொண்டிருந்தேன். என் அறைக்கு எதிர்வரிசை அறையில் தங்கியிருந்த சந்திரகுப்த வித்யாலங்கார், ''காற்று! காற்று! காற்று!'' என்று அலறியடித்துக் கொண்டே அலங்கோலமான தோற்றத்தில் என் அறைக்கு ஓடி வந்தார். விசாரித்தேன். ''காற்று! சூறாவளி! புயல்!'' என்று தொடர்பில்லாமல் ஏதேதோ பேசினார். அவரை அழைத்துக் கொண்டு அவர் அறைக்குச் சென்றேன். அங்கு அறையில் கிடந்த அவர் துணிமணிகள் எல்லாம் மூலைக்கொன்றாய்ப் பறந்து கொண்டிருந்தன. பேய்க்காற்று வீசிப் புத்தகங்கள் — காகிதங்களை அந்தரத்தில் சுழற்றிக் கொண்டிருந்தது. நல்ல வேளை; அந்த நேரத்தில் நான் இடுப்பில் வேஷ்டி கட்டிக் கொள்ளாமல் குழாய் மாட்டிக் கொண்டிருந்தேன். வேஷ்டி கட்டியிருந்தால் என்னைத் திகம்பர சந்நியாசியாக்கி வேடிக்கை பார்த்திருக்கும் அங்கு அடித்த பயங்கரமான காற்று.

அவருக்கு உதவி செய்வதாக நினைத்து, முதல் நாள் மாலை அவர் அறையின் கண்ணாடிக் கதவை நான் திறந்து வைத்ததன் விளைவு இது! இருவரும் சேர்ந்து கதவை மூடித் தாழிட முயன்றோம். முடியவில்லை. எங்களை உள்ளே தள்ளியது காற்று. பிறகு வெளியே ஓடி வந்து எங்கள் அறைகளைக் கவனிக்கும் பெண்மணியைத் துணைக்கு அழைத்து வந்தேன். மூவரும் சேர்ந்து ஒரு வழியாகக் கதவைத் தள்ளி அடைத்தோம். —என்னதான் பாலைவனத்தின் போக்கை அவர்கள் அடியோடு மாற்ற முயன்றாலும், சமயங்களில் அது தன் இயற்கையான சொரூபத்தை இப்படியெல்லாம் காட்டத்தான் செய்தது!

சிற்றுண்டியை முடித்துக் கொண்டு நாங்கள் கலிலுல்லா ஷாவின் அரண்மனைக்குச் சென்றோம். பெரியதொரு கற்கோட்டைக்குநடுவே ஆக்ராவிலுள்ள ஷாஜஹான் அரண்மனையை ஒத்திருக்கிறது அது. கீழே தரையில் அங்கங்கே வட்ட வடிவத்தில் இரும்புக் கம்பிகள் போட்டுச் சுரங்க வாயில்களை மூடியிருந்தார்கள். உற்றுக் கவனித்தேன். கோணல் மாணலான படிக்கட்டுகள் உள்ளே சென்றன. விசாரித்தேன். பழங்காலத்துக் குற்றவாளிகளை அடைக்கும் பாதாளச் சிறைகள் அவை.

அரசர் ஷா நீதி விசாரணை நடத்திய, 'திவானு கானு' என்ற உயர்ந்த மண்டபம் மையத்தில் இருக்கிறது. படி ஏறி மேலே சென்று பார்த்தோம். அரசர் அமரும் இடத்துக்கு எதிரில் ஒரு தலைமட்டும் வெளிவரும் அளவுக்கு ஓர் ஓட்டை இருக்கிறது. பாதாளச் சிறையிலிருந்த கைதிகளை விசாரணை செய்யும் போது அவர்கள் தலை மட்டிலும் தரைக்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்குமாம். கைதி குற்றவாளி என்று முடிவானால் அதே இடத்தில் தலை மட்டும் துண்டிக்கப்படும். நிரபராதி என்று, முடிவானாலும் அவர் விடுதலை செய்யப்பட்டு, அங்கிருக்கும் மற்றொரு சுரங்க வாயில் வழியாக வெளியேற்றப்படுவார்.

அந்த அரண்மனையை இப்போது ஒரு காட்சி சாலையாக மாற்றி நல்ல முறையில் பாதுகாத்து வருகிறார்கள். அரச குடும்பத்தினர் வாழ்ந்த இடங்கள், தொழுகை நடத்

1. பாகூ துறைமுகத்தில் கப்பல்கள். 2. அஜர்பைஜானில் உள்ள 'ஜ்வாலாமுகி' சிவன் கோயிலில் வித்யாலங்கார், வழிகாட்டி, அகிலன், கோஸ்வாமி. 3. ஓவியர் அப்துல்லாயேவ் வரைந்த நம் நாட்டுப் பெண்மணி 4. காஸ்பியன் கடலுக்குள் எண்ணெய் எடுக்கும் இடத்தில், பெட்ரோல் துறை துணை இயக்குனர் திரு. நதோலியுடன்,

திய மருதி, அவர்களுடைய கல்லறைகள் முதலியவற்றைச் சுற்றிப் பார்த்தோம்.

பெட்ரோல் அங்கு இருப்பது கண்டு பிடிக்கப்பட்ட பிறகு, ஆங்கிலேயர், ஜெர்மானியர், ஸ்விடன் தேசத்தார் ஆகியோர் அங்கு வந்து உரிமை பெற்றுத் தொழில் நடத்தத் தொடங்கி விட்டனர். அந்த மேல்நாட்டுப் பெட்ரோல் முதலாளிகள் வாழ்ந்த மாளிகைகளையும், அவர்களிடம் வேலை பார்த்த தொழிலாளர்கள் வாழ்ந்த குப்பங்களையும் புகைப்படம் பிடித்துக் காட்சி சாலையில் வைத்திருக்கிறார்கள். சாக்கடை நதிகளுக்கிடையே உள்ள குடிசைகளுக்கு நம் நாடுதான் உலகத்திலேயே பெயர் போனது என்று நான் நினைத்துக் கொண்டிருந்தேன். அதைப் பொய்யாக்கி விட்டது பாகூ. ஆனால் இவ்வளவும் அறுபது ஆண்டுகளுக்கு முன்பிருந்த நிலைமை. இப்போதோ பெட்ரோல் எடுக்கும் தொழிலாளர்கள் கடற்கரையை அடுத்த மலைச் சரிவுகளில் பெரிய பூங்காக்களுக்கிடையே கட்டப்பட்ட தனித்தனி 'காட்டேஜ்'களில் சகல வசதிகளுடனும் மகிழ்ச்சியோடும் வாழ்ந்து வருகிறார்கள்.




''டிரைவர்களைப் பிடித்து, 'மேலே' என்ற சொல்லுக்கு என்ன பொருள் என்று மறந்து போகச் செய்கின்ற சிறப்பு மூளைச் சலவை செய்யும் நிலையங்களை ஆங்காங்கே சீனாவின் உதவியோடு நிறுவலாம். இதுபற்றி சீனாவுடன் கலந்தாலோசிப்பதற்காக, அமைச்சர் குழு, ஹாங்காங், நியூயார்க், லண்டன், இங்கிலாந்து, ரஷியா வழியாகச் சீனாவிற்குச் சென்று வரலாம்.''
— கருணாசன்

கடலுக்குள் பெட்ரோல் எடுக்கும் இடங்களுக்கு நாங்கள் அழைத்துச் செல்லப்பட்டோம். முதலில் இரு புறங்களிலும் இணைக்கப்பட்ட பிரும்மாண்டமான குழாய்களுக்கிடையே சென்ற பாதையில் தரையில் 4,5 கிலோமீட்டர் எங்கள் கார் சென்றது. அங்கங்கே சில இயந்திரங்கள் தாமாகவே இயங்கிக் கொண்டிருந்தன. மனிதர்களே தென்படவில்லை. பிறகு கடற்கரையை அடைந்து, அங்கிருந்த அலுவலகத்திலிருந்து துணை இயக்குனர் திரு நதோலி என்பவரை அழைத்துக் கொண்டு கடலுக்குள் இரும்புப் பாலத்தின் மேல் விரைந்தோம். விசாலமான உறுதியான பாலம். எதிரே பெரிய பெரிய லாரிகள் வந்து கொண்டிருந்தன. 5,6 கிலோ மீட்டர் கடலுக்குள் சென்ற பின்னர், ஒரு பிளாட்பாரத்தில் இறங்கிக் கொண்டு எங்களுக்கு விவரங்களைக் கூறலானார் நதோலி.

காஸ்பியன் கடலுக்குள் எண்ணெய் வயல் இருப்பது 1949ல் கண்டுபிடிக்கப்பட்டு, 1952 முதல் எண்ணெய் எடுத்து வருகிறார்கள். கடலில் நீர்மட்டத்துக்குக் கீழே 2 முதல் 4 கிலோமீட்டர் வரை தோண்டிய பிறகு எண்ணெய் ஊற்று கிடைக்கிறது. ஒவ்வொரு இரும்புக் கோபுரத்திலும் 3 முதல் 16 வரை எண்ணெய் தோண்டும் இயந்திரங்கள் பொருத்தப்பட்டுள்ளன. ரஷ்யா பயன்படுத்தும் மொத்த எரி வாயுவில் சுமார் பாதி அளவுக்கு எரிவாயுவும், 8 சதவிகிதம் பெட்ரோலும் அஜர்பைஜான் உற்பத்தி செய்து வருகிறது. ஐந்து எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகள் அங்கேயே இருப்பதால் அவர்கள் கலங்கல் எண்ணெயை (crude oil) ஏற்றுமதி செய்வதில்லை — பெட்ரோலுடன் கடலில் இருந்து அவர்களுக்குக் கிடைக்கும் துணைப் பொருள் சுத்தமான வெள்ளி!

''இந்தியாவில் உள்ள ஓர் எண்ணெய் வயலில் தீப்பற்றிக் கொண்டபோது நாங்கள் இங்கிருந்துதான் எங்கள் நெருப்பு அணைக்கும் படையை அனுப்பி உதவினோம்'' என்று பெருமையோடு குறிப்பிட்டார் நதோலி.

உலகத்தின் பெரும் பகுதி நாடுகள் இப்போது பெட்ரோல் பற்றுக்குறையால் பெரும் அவதிப்படுகின்றன. நம்முடைய நாடும் தன் வருமானத்தில் கணிசமான தொகையைப் பெட்ரோலுக்குச் செலவிட்டு வருகிறது. ரஷ்யாவுக்கு அந்தக் கவலை சிறிதும் இல்லை. நாமும் அவர்களுடைய உதவியைக் கொண்டு நம் நாட்டுக் கடலோரங்களில் இன்னும் தீவிரமான ஆராய்ச்சிகள் நடத்தலாம். எரி பொருள் வளத்தில் என்று நாம் தன்னிறைவு காணுகிறோமோ, அன்றுதான் நாம் முன்னேற்றப் பாதையில் ஏறு நடை போட முடியும்.

ஜூலை இரண்டாம் நாள் முற்பகல் 'ரஷ்யாவின் மக்கள் ஓவியர்' என்று அழைக்கப்படும் திரு அப்துல் லாயேவை அவருடைய ஸ்டுடியோவில் காணச் சென்றோம். ஏற்கெனவே அவரது அற்புதமான ஓவியங்கள் சிலவற்றை ரஷ்யாவின் பல கண்காட்சி சாலைகளில் நான் கண்டிருக்கிறேன். 1957ல் ஒரு முறையும் 1971ல் மறுமுறையும் இந்தியாவுக்கு வந்து இந்திய வாழ்க்கை பற்றி நூற்றுக் கணக்கான ஓவியங்களை வண்ணங்களில் வரைந்தவர் அவர். 1969ல் நேரு விருது பெற்றவர்.

''எப்படி உங்களுக்கு இந்திய வாழ்க்கையில் பற்றுதல் ஏற்பட்டது?'' என்று கேட்டேன்.

''அஜர்பைஜான் மக்களுக்கும் இந்திய மக்களுக்கும் — குறிப்பாகக் கிராமப்புறங்களிடையே — நெருங்கிய ஒற்றுமை இருப்பதை என்னால் உணர முடிகிறது. அதுதான் என்னை இந்தியாவிடம் ஈடுபாடு கொள்ளச் செய்தது'' என்றார்.

அவர் எழுதிய இந்தியக் காட்சிகள் கொண்ட வண்ணப் படங்கள் பலவற்றின் பிரதிகளை அன்பளிப்பாக எங்களுக்கு வழங்கினார். பெங்களூருக்கும் சென்னைக்கும் அவர்

வந்திருந்த நாட்களை அன்போடு நினைவுகூர்ந்தார். இந்தியர்களின் விருந்தோம்பல் பற்றிக் குறிப்பிட்டு, தாமும் பல்வகைப் பழங்களாலான ஒரு சிறு விருந்துக்கு ஏற்பாடு செய்து விட்டார்.

அன்று மாலை மூன்று மணிக்கு நாங்கள் சிவன் கோவிலைப் பார்க்கப் புறப்பட்டோம். பாகூவிலிருந்து 25 கிலோமீட்டர் தொலைவில் 'அதிஷ்க்யா' என்ற பகுதியில் இருக்கிறது அது. சிவன் கோவில் என்றால் நம்முடைய தமிழ் நாட்டில் உள்ள கோயிலைப் போன்றதல்ல அது. ஹிமாசலப் பிரதேசத்தில் கங்ரா என்ற இடத்தில் 'ஜ்வாலாமுகி மந்திர்' என்று ஒன்று இருக்கிறது. நெருப்பை முகமாகக் கொண்ட ஈசுவரனின் கோயில் என்று அதற்குப் பொருளாம். அந்தக் கோயிலை ஒரு முன்மாதிரியாகக் கொண்டு, அதைப் போலவே அங்கும் கட்டியிருக்கிறார்கள்.

அந்தப் பகுதியில் ஒரு பாறை இடுக்கிலிருந்து நெருப்புக் கிளம்பி ஐந்தாவது நூற்றாண்டிலிருந்து 19ம் நூற்றாண்டு வரை எரிந்து வந்திருக்கிறது. தொடக்க காலத்தில் இதைப் பார்ஸிகள் தங்கள் தெய்வமாக வழிபட்டிருக்கிறார்கள். பிறகு 1713லிருந்து வாணிகத்துக்காக அந்தப் பக்கம் வந்த ஹிந்துக்களை அது ஈர்த்திருக்கிறது. கங்ராவில் உள்ளதைப் போலவே இங்கும் சிவபெருமான் 'ஜ்வாலாமுகி'யாக விளங்குவது கண்டு கோயில் கட்டத் தொடங்கி விட்டார்கள். இந்தியாவிலிருந்து யாத்திரீகர்கள் வரத் தொடங்கி விட்டார்கள்.

'காரவன் சராய்' போலவே உயர்ந்த மதில் சுவர்கள் கொண்ட சதுரமான பெரிய கோட்டைக்கு நடுவில் அமைந்திருக்கிறது அந்தச் சின்னஞ் சிறு கோயில். அந்தக் கோட்டைக்குள் சுவர்களை ஒட்டி நான்கு புறங்களிலும் 26 மடங்கள் கட்டப் பட்டிருக்கின்றன. 1713 முதல் 1827 வரை அங்கே 40 சாதுக்கள் வாழ்ந்திருக்கிறார்கள். கங்ராவில் எப்படிக் கோயில் இருக்கிறதோ, அதே அமைப்பில் மத்தியில் தீ எரியும் இடத்தை மையமாக வைத்து நான்கு புறங்களிலும் வாயில் விட்டுச் சதுரமாகச் சுவர் எழுப்பியுள்ளார்கள்.

கோட்டையின் முகப்பு வாயிலில் தெரிந்த நகரி எழுத்துச் சம்ஸ்கிருதக் கல்வெட்டைப் படித்தார் சந்திர குப்த வித்யாலங்கார்:

''ஸ்ரீ கணேசாய நமஹ. நரபதி விக்ரம ராஜாவின் 1873ம் ஆண்டு சுக்லபட்சம் ஒன்பதாம் நாள்... குருக்ஷேத்திரத்தில் இப்போது வசித்து வரும் மாஜகம்மா கிராமத்தைச் சேர்ந்த புத்த தேவாவின் பொருளுதவியால் இது கட்டப்பட்டது.''

இப்படிப்பட்ட 20 கல்வெட்டுகள், 1713 தொடங்கி 1827 வரை அங்குள்ள பல பகுதிகளில் காணப்படுகின்றன. கோயிலில் எரிந்து கொண்டிருந்த நெருப்பு 1827 வரை எரிந்திருக்க வேண்டும். பிறகு பெட்ரோல் எடுக்கத் தொடங்கிவிட்டதால் அந்த இடத்திலிருந்த எரிவாயுவின் சக்தி குன்றி அது அணைந்திருக்க வேண்டும். 40 பேர்கள் வரை வாழ்ந்த இடத்தில் 1827ல் ஒரே ஒருவர்தான் இருந்திருக்கிறார். அவரும் அங்கேயே தங்கி இறந்திருப்பாரா அல்லது நாடு திரும்பி யிருப்பாரா என்ற விவரம் தெரியவில்லை.






இந்தியாவுக்கு பிரிட்டன் அன்பளிப்பாக வழங்கும் 318 நடமாடும் மருத்துவமனைகளுள் ஒன்றின் உட்புற வெளிப்புறத் தோற்றங்கள். இம் மருத்துவ மனைக்குள், பரிசோதனைக் கட்டில், சஸ்திர சிகிச்சைக்கான பலவித உபகரணங்கள், பிரசவம் பார்ப்பதற்கான வசதிகள் எல்லாம் உள்ளன. மின்சாரம் உற்பத்தி செய்யச் சிறிய ஜெனரேட்டர் தவிர மீன் கலப்பெட்டிகளும் உண்டு!

முதலில் கோயிலைப் பார்த்தோம். நெடுங்காலம் அங்கு நெருப்பு எரிந்ததற்கான அடையாளம் நன்கு தெரிந்தது. பிறகு மடங்களைச் சுற்றிப் பார்த்தோம். 26 கூடங்கள். அவற்றில் ஒரு கூடத்தில் அங்கு கிடைத்த பொருள்களைச் சேகரித்துக் கண்காட்சியாக வைத்துள்ளார்கள். பழங்கால இந்திய நாணயங்கள், சங்கு, கற்பூரத் தட்டு, தாளம், சிறு பறை போன்ற வழிபாட்டுக்குத் தொடர்புடைய பொருள்கள் அவை.

5000 கிலோமீட்டர் தொலைவிலிருந்த இந்திய நாட்டிலிருந்து பக்தியில் முதிர்ந்த யாத்திரிகர்கள் இப்போதைய ஈரான் வழியாக இங்கு வந்து ஜ்வாலாமுகியை வழிபட்டிருக்கிறார்கள். ஐரோப்பிய நாடுகளுக்குச் செல்லும் வழியில் இந்திய வணிகர்கள் பலரும் இங்கு வந்து சென்றிருக்கக் கூடும். கோயிலின் அருகே கிணறு ஒன்று தென்படுகிறது. குடிக்கவும் குளிக்கவும் அதிலிருந்த நீரை அங்கு வாழ்ந்த சாதுக்கள் பயன்படுத்தி இருப்பார்கள் என்று தெரிகிறது. (தொடரும்)

# நீரஜா-நான்-ரோஷித்

## சுந்தரராஜன்

நான் உள்ளே நுழையும்போதே அவளைக் கவனித்தேன். அவள் என்னுடன் ரொம்ப நாள் பழகிய மாதிரி மெதுவாகத் தலையைச் சாய்த்து முத்துப் பல் வரிசையைக் காட்டிச் சொக்க வைக்கும் வண்ணம் சிரித்தாள். அப்போதே என் இதயத்தில் புகுந்துகொண்டாள்.

யாராக இருக்கும் அவள்?

இன்னும் பத்து நிமிஷம் இருக்கிறது. எப்படிப் பொழுது போக்குவது?

கேன்டீனில் காப்பி கப் ஒன்றை வாங்கிக் குடித்துக் கொண்டே அவளைக் கவனிக்கிறேன். அவள் ப்ரொஃபைல் தெரிகிறது. நல்ல உயரமாக, எடுப்பான மார்போடு, ஸ்லீவ் லெஸ் ரவிக்கையோடு — 'ஓ! பிரமன் உன்னை எப்படிப் படைத்தான் பெண்ணே?' கொஞ்சம் விலகி நின்ற புடவை, ஜாக்கெட்டுக்குக் கீழே சரசரவென்று நாற்பத்தைந்து டிகிரியில் இறங்கிய இடுப்புப் பக்கப் புடவையைக் காட்டியது. இடுப்பின் பளபளப்பு அந்த அரைகுறை வெளிச்சத்திலும் நன்கு தெரிந்தது.

நான் என் இருக்கையில் சௌகரியமாய்ச் சாய்ந்து கொண்டேன். மேடையில் யாரோ ஒரு பெண் 'தந்தாத் தா, தராட்டிப் போ!' என்று யாரோ சொல்ல, ஆடிக் கொண்டிருந்தாள். ம்ஹூம், சத்தியமாக என்னால் நடனத்தையெல்லாம் ரசிக்க முடியாது.

கண்களை மெல்ல மூடிக் கொண்டேன். மறுபடியும் அவள்!

ஸ்ரீதரனுக்கு நன்றி சொல்ல வேண்டும். அவன்தான் நேற்று என்னிடம் இந்த நிகழ்ச்சிக்கான டிக்கெட்டைக் கொடுத்தான்.

''லுக் தேவா, என் வீட்டுக்கு நேத்து இரண்டு மூன்று அழகான இளம் பெண்கள் வந்து என் தலையில இந்த டிக்கெட்டைக் கட்டிட்டுப் போயிட்டாங்க. என் மனைவி தான் அந்தக் காலேஜின் பழைய மாணவி யாச்சே! திடீர்னு அவள் இப்ப நாளைக்கு வேறெங்கேயோ போகணும்கிறா. உன் ஞாபகம் வந்தது. நீதான் எழுத்தாளனுச்சே கவிதை கொடுத்து வைச்சவன்! பிரம்மச்சாரி வேறே. போ, கொஞ்சம் தரிசனம் கிடைக்கும். கொஞ்சம் கற்பனையும்....''

அவன் மெல்லக் கண்களைச் சிமிட்டினான்.

நான் தனியாகத்தான் கிளம்ப வேண்டி வந்தது. இன்றைக்கென்று பார்த்து எனக்கு மட்டும் வேலை யில்லாமல், நண்பர்கள் எல்லோருக்கும் முக்கிய வேலை எப்படித்தான் அமைந்ததோ!

அலுப்புடன் வாசலில் ஸ்கூட்டரை நிறுத்தி விட்டு உள்ளே நுழைந்தபோதுதான் அவள் முதன் முதலில் தென்பட்டாள்.

''எக்ஸ்க்யூஸ் மீ!''

நான் என் வரிசை மக்களைக் கடந்து வெளியே வந்தேன். அவள் இன்னும் வாசலிலேயே நின்று கொண்டிருந்தாள். மறுபடியும் அந்தச் சிரிப்பு.

''ஹலோ! ப்ரொக்ராம் ரசிக்கலையா?''— அவள் ஆங்கிலத்தில் கேட்டாள்.

''நோ....நோ....ஜஸ்ட்....''

திடுமென ஓர் ஐடியா. முயலலாமா?

''கமிங் ஃபார் எ காஃபி?''

அவள் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டாள்.

''நேரம் ஆகிவிட்டது. இனி யார் வரப் போகிறார்கள்?'' — அவள் குரலில் இருந்த மெல்லிய ஏமாற்றம் எனக்குப் புரிந்தது. யாரை எதிர்பார்க்கிறாள்?

''வாருங்கள் போகலாம்!''

அவள் நடந்தாள், நான் தொடர்ந்தேன்.

பெண்ணே, இதேபோல் நாம் வாழ்க்கை முழுவதும் நடந்தும், தொடர்ந்தும் இணைந்தும் செல்வோமா? என் ஒவ்வொரு கதையிலும் நானும் நீயுமே பரிபூரணமாக நிறைந்திருப்போமா?

நான் என்னை அறிமுகம் செய்து கொண்டேன். எழுத்தாளன் என்பதைக் குறிப்பிடவில்லை.

''நான் நீரஜா. மிஸ் நீரஜா தட்சிணாமூர்த்தி. ஃபர்ஸ்ட் பி.எஸ்.சி. எங்கப்பா ஒரு இண்டஸ்ட்ரலியஸ்ட்.''

ஓ, தட்சிணாமூர்த்தி? என் மண்டையில் 'முணுக்' என்று ஒரு விளக்கு எரிந்து அணைந்தது. என் சிறுகதை ஒன்றுக்கு முதல் பரிசை விழா மேடையில் கொடுத்த புண்ணியவான்.

''நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம்.''

''ஓ; ஷ்யூர்! இன் ஃபாக்ட் அவர் தலைமையில்தான் நான் ஒரு பரிசு வாங்கினேன், மூன்று மாதங்களுக்கு முன்னால்.''

''ஹௌ இன்டரஸ்டிங்!''

நான் போய் இரண்டு கோப்பை காப்பி வாங்கி வர, ஆளுக்கொன்றாய் எடுத்துக் கொண்டு, காலியாய்க் கிடந்த இரு நாற்காலிகளில் அமர்ந்து கொண்டோம்.

''யு சீ மிஸ்டர் தேவநாதன். நான் சமீபத்தில்தான் இங்கு வந்து சேர்ந்தேன். இதுவரை படித்ததெல்லாம் பம்பாயில். நான் டமிலியன்னுதான் பேரு. பட் டமில் சுமாராத்தான் வரும். அஃப்கோர்ஸ்... சினிமா எல்லாம் பார்ப்பேன். ஆனால் படிக்கத் தெரியாது. எனக்குத் தமிழில் தெரிந்த ஒரே ஆசிரியர் சுஜாதாதான். அவர் பெயரைத்தான் அடிக்கடி சொல்றாங்க. பை எனி சான்ஸ், ஆர் யு சுஜாதா?''

எனக்கு சுஜாதா மீது கொஞ்சம் பொறாமை வந்தது.

நேரம் ஓடியது.

''நல்ல கூட்டம் போல் இருக்கு.''

''யெஸ், வெரி குட் ரெஸ்பான்ஸ்! டிக்கெட் எல்லாம் ரொம்ப ஃபாஸ்டா வித்துப்

போச்சு. யூ வில் பி சர்ப்ரைஸ்ட். யாரிடம் எல்லாம் தெரியுமா வித்தோம்?''

எனக்கு மனசுக்குள் குறுகுறுத்தது. நான் ஓசியில் வந்தவன் என்பது அவளுக்குத் தெரிந்தால் என்ன செய்வாள்?

''கேன் யூ இமாஜின்? ரோஹித் கூட வருவதாக ப்ராமிஸ் பண்ணினார்.''

ரோஹித்.... என் புருவங்கள் இணைந்து பிரிந்தன. ஓ, நடிகன் ரோஹித்தா? அவன் சமீபத்தில் சினிமாவில் புகுந்திருந்த இளம் நடிகன். தன் உடலழகாலும், முகக் கவர்ச்சியாலும் எத்தனையோ பெண்களைத் தன்னை நினைத்து ஏங்க வைப்பவன். அவனை அட்டையில் போட்டு வெளியான இதழ், வழக்கத்தை விடப் பதினைந்து சதவிகிதம் அதிகம் விற்றதாக என்னிடம் பத்திரிகை ஆசிரியர் ஒருவர் சொல்லி இருந்தார்.

ரோஹித் என் நண்பனும் கூட.

அவனுக்கு இலக்கியத்தில் கொஞ்சம் ஆர்வம் இருந்தது. என்னுடைய ஏதோ ஒரு கதையைப் பாராட்டி எழுத, நான் பதில் எழுத.... அடுத்த தடவை அவன் மதுரை வந்தபோது நான் அவனைப் போய்ச் சந்தித்தேன். மறுதடவை என் வீட்டுக்கு வருவதாகச் சொல்லி யிருந்தான்.

''ரோஹித் என்றால் அத்தனை அபிமானமா உங்களுக்கு?''

''யெஸ். நான் தமிழ்ப் படங்கள் ரோஹித் நடித்தது என்றால் விடமாட்டேன். ஓ, வாட் எலவ்லி ஃபிகர்? ஹி ஈஸ் இரேட் மிஸ்டர் தேவநாதன்.''

''நீங்கள் எப்படி அவரைப் பிடித்தீர்கள்?''

''அவர் ஏதோ ஷூட்டிங்குக்காக மதுரை வந்திருப்பதாகத் தெரிந்தது. நேரில் போய்ச் சந்திக்க முயன்றேம். முடியவில்லை... ஃபோனில் தான் பேச முடிந்தது. கண்டிப்பாக வர முயல்வதாகச் சொன்னார். இன்று மாலை மறுபடியும் ஃபோன் செய்த போது, மாலை ஆறு மணிக்குச் சரியாக இங்கு இருப்பதாகச்சொன்னார்.''

''அவரையே சீஃப் கெஸ்டாகப் போட்டிருக்கலாமே!'' என் எரிச்சலுக்கு முலாம் கொடுத்தேன்.

''அவர் ஒத்துக் கொள்ளவில்லை. நேரம் கிடையாதாம். இன் ஃபாக்ட், ஆறரைக்குள் வராவிடில், திடீரென்று ஏதோ வேலை வந்து விட்டதாக வைத்துக் கொள்ளும்படி சொன்னார்.'' — அவள் குரலில் தெரிந்த சோகம் எனக்குள் ஊமை அழுகை ஊற்றைத் திறந்து விட்டது. திடீரென்று கண்களில் பட்ட கனியைப் பறிக்க எண்ணுகையில், எங்கிருந்து இனி வந்து சேர்ந்தது?

அவளிடம் சொல்லலாமா, நான் ரோஹித்தின் நண்பன் என்று? வேண்டாம் எனத் தீர்மானிக்கிறேன். ரோஹித் மூலம் இவள் அன்பை



ஏன் அடைய வேண்டும் என்று தன்மான உணர்ச்சி தடுத்தது.

அவள் கிளம்பும்போது, என்னை மறுநாள் ஞாயிற்றுக் கிழமை தன் வீட்டுக்கு வரும்படி அழைத்தாள்.

மனம் இருக்கிறதே — அது ரொம்ப விசித்திரமானது. சனிக்கிழமை இரவு முழுதும் என்னை உறங்கவிடவில்லை.

'நீ நீரஜாவைப் பார்க்க வேண்டும்.... பார்க்க வேண்டும்.... பார்க்கத்தான்....'

நான் கிளம்பி விட்டேன்.

தட்சிணாமூர்த்திகூட வீட்டில்தான் இருந்தார். என்னை அவர் அடையாளம் கண்டு கொண்டார்.

''ஓ, மிஸ்டர் தேவநாதன். கமான் நேற்றே நீரஜா சொன்னாள். வாங்கோ, உட்காருங்கோ. அவ தன் ஃப்ரெண்ட் வீட்டுக்குப் போயிருக்கா. வந்துடுவா. என்ன சாப்பிடறேள்?''

எனக்கு ஏமாற்றமாக இருந்தது. போய்ச் சோபாவில் அமர்ந்தபோது....

டெலிஃபோன் மணி ஒலித்தது.

அந்த மணியோசை சட்டென்று மனத்தில் ஒரு பயத்தை நிறைத்தது. மூர்த்தி போனை எடுப்பதைப் பார்த்தேன். அவர் முகம் மெல்ல மெல்லக் களையிழப்பதைப் பார்த்தேன். சம்திங் ராங்....

எனக்கு நீரஜாவின் முகம் ஞாபகம் வந்தது. அந்தக் குழந்தைத்தனமான முகம், எதிரில் இருப்பவர்கள் மேலும் உற்சாகத்தை எறியும் கலகலப்பான முகம்!

மூர்த்தி போனைக் கீழே வைத்தார்.

''மிஸ்டர் தேவன்..! மை டாட்டர் நீரஜா ஆக்ஸிடெண்டாம்.... தன் ஃப்ரெண்டு ஒருத்தியுடன் ஸ்கூட்டரில் வரும்போது மேல் பாலவளைவில்... ஓ காட்! என் பெண் பிழைப்பாளா? மை டார்லிங் நீரஜா!''

என் கைகளைப் பிடித்துக் கொண்டு அழ ஆரம்பித்தார் மூர்த்தி.

நீரஜா, உனக்கு விபத்தா? உனக்கா? நேற்றுக்கூடக் குறும்போடு, ''நீங்கள் கஜா தாவா?'' என்று கேட்ட உனக்கா? ஓ நோ, காட், யூ ஆர் க்ரூயெல்!

மூர்த்தி, அவர் மனைவி, நான் மூவரும் அவர் காரிலேயே விரைந்தோம். பெரிய ஆஸ்பத்திரியின் எமர்ஜென்ஸி வார்டுக்கு.

நீரஜாவின் அறைக்குள் நுழைந்தோம்.

நீரஜா! உன் முகம் முழுதும் என்ன இது? செந்நிறத்தின் மேல் வெள்ளை வெள்ளையாய்ப் பிளாஸ்திரிகள்!




அவன் முணு முணுத்தது எங்கள் காதுகளில் விழுந்தது. ''ரோஹித்... குட் ஐ மீட் ஹிம்? நான் அவரைப் பார்க்க வேண்டும்.''

'ரோஹித்!'—மூர்த்தி என் பக்கம் கேள்விக் குறியுடன் திரும்பினார். நான் அவரைப் பார்த்துத் தலையசைத்துவிட்டு, தொலைபேசி இருக்கு மிடத்துக்கு விரைந்தேன்.

ரோஹித்தின் காரியதரிசிக்கு என்னைத் தெரியும். உடனே ரோஹித்துடன் இணைக்கப்பட்டேன். நல்ல வேளை ரோஹித் அறையில் இருந்தான்.

''ரோஹித், ஐ ஆம் தேவநாதன் ஹியர்.''

அவன் கொஞ்சம் யோசிப்பது புரிந்தது.

''ஓ, தேவநாதன்! சாரி, நாங்க திடீர்னு மதுரைக்கு வந்தோம். ரொம்ப டைட் ஷெட்யூல். அதனால்தான் உங்களை....''

''ரோஹித்! சீரியஸான விஷயம்.''

''ஷூட்.''

''அந்தக் கல்லூரி மாணவி நீரஜா...''

''நீரஜா....?''

அவன் மறுபடியும் யோசித்தான் போலும்.

''கரெக்ட். அவ இப்பக்கூட என்னைப் பார்க்க வந்திருந்தாளாம். என் காரியதரிசி அவளைத் திருப்பி அனுப்பிச்சுட்டானும். ஐ வாஸ் வெரி டயர்ட். இந்தப் பெண்களோட ரொம்பத் தொந்தரவாப் போயிடுதுங்க.''

எனக்குள் ஓர் எரிச்சல் மரம் கிளம்பியது, முளை விட்டு.

''ரோஹித், இப்ப உடனே எமர்ஜன்ஸி வார்டுக்கு வர முடியுமா? பெரிய ஆஸ்பத்திரியில்?''

''கமான், ஜோக் அடிக்கிறீங்களே! நான் எப்படித் தெரியுமா இருக்கேன், ஸரட் நௌ? உடனேவா?''

''ப்ளீஸ்... அந்த நீரஜா இப்பத் தன் வாழ்வின் நிமிடங்களை எண்ணிக் கொண்டிருக்கிறாள்.''

''என்ன?''

நான் சுருக்கமாக விவரித்தேன்.

காம்பவுண்டைச் சுற்றிலும் ஒரே கூட்டமாக நின்று கொண்டிருந்தது. நானும் ரோஹித்தும் மௌனமாக வெளியே வந்தோம். கூட்டம் கையை ஆட்டியது உற்சாகத்தோடு.

''தேவன், ஐ ஆம் ரியலி சாரி ஃபார் த கேர்ல். ஐ மீன், என்னால் இமேஜின் டண்ண முடியல்லே. திடீர்னு ஒரு பெண், என் கையைப் பிடிச்சுண்டு, 'ரோஹித், ஐ லவ் யூ'ன்னு சொல்லிட்டு, உடனே செத்துப் போறு. சினிமாவில் கூட இம்மாதிரி சீன்...''

அவன் குரல் கரகரத்தது. உதடுகளைக் கடித்துக் கொண்டு நான் கார்க் கதவைத் திறந்து விட்டேன். அவன் ஏறிக்கொண்டான்.

''ப்ளீஸ் டெல் த ஜென்டில்மேன் ஐ அம் சாரி, தேவநாதன், ரியலி ஐ அம் சாரி. இப்ப எனக்குத் தனிமை வேண்டும்!''

அவன் கதவைச் சாத்திக் கொண்டான். கூட்டத்தை விலக்கிக் கொண்டு கஷ்டத்துடன் டிரைவர் வண்டியைக் கிளப்பினான்.

நான் ஆஸ்பத்திரியை நிமிர்ந்து பார்த்தேன். என் நீரஜா இங்குதான் உறங்கிக் கொண்டிருக்கிறாள்.

உறங்கு, நீரஜா, உறங்கு.

## இன்பப் பொங்கல் வருகுது! இனிய செய்தி சொல்கிறோம்!

## 20% தள்ளுபடி!

எல்லா பட்டு, பருத்தி ரகங்களுக்கும்

# ஹேண்ட்லூம் ஹவுஸ்

## டிசம்பர் 15 முதல் அளிக்கிறது!

---

விழாக் காலத் தள்ளுபடிக்கும் மேலாக,
ஹேண்ட்லூம் ஹவுஸ் உங்களுக்கு அளிப்பது —

- தேர்ந்தெடுக்கப்பட்ட அகில இந்திய ரகங்கள் — தேங்கிப் போன சரக்குகள் அல்ல.
- விசேஷ கவனத்துடன் இன்முகச் சேவை.



**ஹேண்ட்லூம் ஹவுஸ்**
9, ரத்தன் பஜார்,
சென்னை 600 003.

ADWAVE/HH/1194 TAM

- ஞாயிற்றுக் கிழமையும் உங்களுக்காகவே திறந்திருக்கும்.

## அத்தியாயம் 9

கமலம் போல் அழகான முகத்தில் நீலம் படர்ந்திருக்க—
நீல்கமல் பிணமாகக் கிடந்தாள்.

கொலையுண்டது சுநீதா இல்லை என்ற அளவில் வினோதிற்குச் சற்று நிம்மதி என்றாலும் நீல் கமலின் மரணம் அவனை அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

அருண்தான் துடிதுடித்துப் போனான். அவனுக்கு நீல் கமல் கொலையுண்டு கிடக்கிறாள் என்ற உண்மையை ஜீரணிக்கவே நேரம் பிடித்தது.

''டேவிட் கூட போனா சார்... அவன்தான் கொலை செய்திருப்பான்'' என்று வினோதின் காதைக் கடித்தான்.

வினோதிடம் சகஜமாகப் பேசினார் கிரைம் பிராஞ்ச் பசவராஜ்.

''இது மாதிரி ஒரு பெண் கொலை செய்யப்பட்டுக் கிடக்கிறா. ஜோஸ் என்கிறவன் கொலை செங்கட்டான்'னு போன் வந்தது'' என்றார்.

அவரைத் தனியாக அழைத்துப் போய்க் கொள்ளைக் கோஷ்டி விவரங்களைக் கூறி, தான் உடனடியாகக் கமிஷனருடன் போனில் தொடர்பு கொள்ள வேண்டும் என்றான்.

தான் சென்னையிலிருந்து வந்தது முதல் அந்தக் கணம் வரை நடந்ததைப் பற்றிச் சுருக்கமாகக் கமிஷனருடன் வினோத் விவரித்தான்.

ஆறு மாதத்துக்கு முன்னால் செகந்தராபாத்தில் நடந்த வைரக் கொள்ளை, இரண்டு மாதங்கள் முன்னால் கோயம்புத்தூரில் நடந்த



# முற்றுப் பெறாத வாக்கியங்கள்...

மதனா மிருத்தியுஞ்சயன்



கொள்ளை, ரங்கூன் ராமையா கொலை ஆகியவற்றுக்கு இந்தக் கோஷ்டிதான் காரணம் என்றும், உடனடியாக அவர்கள் செயல்பட்டால் கோஷ்டியை வளைத்துப் பிடித்து விடலாம் என்றும் கமிஷனரிடம் தீர்மானமாகக் கூறினான்.

வினோதின் முயற்சிகளைப் பாராட்டிய கமிஷனர், ''மிஸ்டர் வினோத்! ஐ வில் டெல் பசவராஜ் டு கோஆபரேட் வித் யூ... உங்கள் முயற்சியில் இக்கோஷ்டி பிடிபட்டால்



எங்கள் மாநிலத்துக்குப் பெரும் பெருமை. எங்கள் முதலமைச்சரிடம் சொல்லி உங்களைக் கௌரவிக்காமல் விடமாட்டோம்'' என்றார்.

வினோதுக்கு எல்லா வித உதவிகளையும் அளிக்கும்படி பஸவராஜுக்குக் கட்டளை பிறப்பித்தார்.

''மிஸ்டர் பஸவராஜ்! என் அஸிஸ்டெண்ட் அருண் துணையுடன் தயவுசெய்து கொள்ளைக் கோஷ்டியின் ரகசிய இடங்களைக் குறைந்தபட்சம் நூறு போலீஸ் கொண்டு முற்றுகையிட்டு அகப்பட்டவர்களைக் கைது செய்துவிடுங்கள். உடனடியாக எனக்கு ஒரு ஜீப்பும் இரண்டு மஃப்டி போலீஸாரும் வேண்டும். கோஷ்டித் தலைவன் காரில் சென்னைக்குப் போகாமல் தடுக்க வேண்டும். பெங்களூர் சென்னை ஹைவேயில் நான் கவனம் செலுத்த விரும்புகிறேன்'' என்றவன் ''இந்த லேடி எனக்கு எழுதின கடிதத்தைப் பார்க்கலாமா?'' என்றும் கேட்டான்.

''ஓ ஷ்யூர்.... ரசாயனப் பரிசோதனைக்கு மீதி விஷயங்களை அனுப்பி விட்டேன். இவள் உடலையும் கடிதத்தையும் மட்டும் நீங்கள் பார்த்ததும் அனுப்பலாம்னுதான் காத்திருந்தேன்.''

கைக்குட்டையில் மடித்து வைத்திருந்த கடிதத்தை மிருதுவாகப் பிரித்துக் கைக்குட்டை மீதாக வைத்தார்.

'சென்னையிலிருந்து வந்திருக்கும் சி.ஐ.டி. வினோதிடம் இக்கடிதத்தைச் சேர்ப்பித்து விடவும்' என்று கடித முகப்பில் இருந்தது.

அன்புள்ள வினோதுக்கு....

இக்கடிதம் கிடைக்கும்போது நான் உயிருடன் இருப்பேனோ என்னவோ.... ஜோஸ் மாதிரி இவனையும் எண்ணிக் கிளம்பிவிட்டேன். பீட்டர் இவ்வளவு குரூரமானவன் என்று எனக்குத் தெரியாது. இவனுடன் நான் வந்துவிட வேண்டுமாம். இல்லாவிடில் கொன்றுவிடுவேன் என்று சொல்லிவிட்டு வெளியே போயிருக்கிறான். திரும்ப வந்தால் என்ன செய்வானோ.... இனி வாழ்ந்தால் உங்களுடன் வாழ்வது இல்லாவிடில் மரணமே மேல்....

அருணிடம் உள்ள டேப் ரிகார்டரில் கோஷ்டியைப் பற்றிய எல்லா விவரங்களும் உள்ளன. உடனே எல்லோரையும் கைது செய்யுங்கள்.....

உங்களுக்கு ஒரு காதலி இருக்கிறாளாமே... அவள் என் சகோதரி மாதிரி. அவளை இந்தப் பாவிகள் கடத்தி வந்திருக்கின்றனர். அவளை எப்படியாவது மீட்டுவிடுங்கள்...

நீங்கள் ஜாக்கிரதையாகச் செயல்படுங்கள்.

ஒருவேளை உயிருடன் மீண்டு உங்களை நான் சந்தித்தால் என்னை மனைவியாக நீங்கள் ஏற்க வேண்டாம்.... உங்களுக்காகவே வாழ்க்கையை அர்ப்பணிக்கத் துணிந்த அபலை என்பதால் எந்த வகையிலாவது உங்களுடன் என்னைப் பிணைத்துக் கொண்டு உங்....

—நீல்கமலின் அபிலாஷைகள் போலவே கடிதமும் முற்றுப் பெறுமல் முடிந்திருந்தது.

துக்கம் நெஞ்சை அடைக்க விநோத் மயங்கி நின்றான்.

சில நிமிடங்களில் கடமையை உணர்ந்தவனாகத் தன் நிலைக்கு மீண்டான்.

பதினைந்து நிமிடங்களுக்குள் ஒரு ஜீப் வண்டியையும் இரு போலீஸ்காரர்களையும் பஸவராஜ் ஏற்பாடு செய்து கொடுத்தார்.

கோஷ்டியை வளைக்க அருணும் பஸவராஜும் ஒருபுறமும், ஜீப்பில் விநோத் சென்னையை நோக்கியும் பிரிந்தனர்.

ஜீப் ஓடிக் கொண்டிருந்தது.

நீல் கமலைச் சந்தித்ததிலிருந்து அவளுடனான சம்பாஷணைகளை நினைவுக்குக் கொண்டு வந்து விநோத் அசை போட்டான்.

'காதல் என்பது மற்ற உணர்வுகளைப்போல் சாதாரணமானதுதான். காதலனே காதலியோ, காதல் உணர்வுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தாலும், மகத்துவத்தாலும் அது தான் எவ்வளவு புனிதமாகி விடுகிறது' என்று அவன் உள்ளம் எண்ணியது.

அதே சமயம் அவன் தன்னைத்தாண்டியோ, முன்பாகவோ போகும் கார்களை உன்னிப்பாகக் கவனித்தான்.

செக் போஸ்ட்களில் விசாரித்தான். சந்தேகத்துக்கு இடமாக ஒன்றும் இல்லை என்று பதில் வந்தது.

அடையாளமே தெரியாத நிலையில் கோஷ்டித் தலைவனை எப்படி மடக்கப் போகிறோம் என்று கவலையாக இருந்தது அவனுக்கு. தான் இது மாதிரி வந்து தேடுவதே பைத்தியக்காரத்தனமோ என்று கூட யோசனை.

ஜீப் ஓடியது.

கர்னாடக எல்லையைத் தாண்டி, தமிழக எல்லைக்குள் வந்துவிட்ட நிலை.

---

தகப்பனார்: இதென்னடா "போனஸ்" என்பதற்குப் பதில் "பேனஸ்" என்று எழுதியிருக்கிறான்?

மகன்: அதுதான் உங்கள் ஆபிஸில் போனஸ் தராமல் காலை வாரி விட்டுட்டாங்களே!



---

முன்னால் ஓர் அம்பாஸிடர் கார் ஓடிக் கொண்டிருந்தது.

ஜீப்பின் முன் விளக்கு ஒளியில் அந்தக் காரின் பின் சீட்டில் உட்கார்ந்த பெண் சுநீதாவோ என்று விநோதுக்குள் ஒரு பிரமை.

டிரைவரை வேகமாக ஓட்டச் சொன்னான்.

இவனுடைய அதிர்ஷ்டம் ஒரு பெட்டிக் கடை முன் அம்பாஸிடர் நின்றது.

காரின் அருகில் ஜீப்பையும் நிறுத்தச் சொன்னான்.

சுநீதாதான் காரில் உட்கார்ந்திருந்தாள்.

பக்கத்தில் 'மசண்டாக' ஐம்பது வயதுக்காரர் ஒருவர்.

இருவரும் பேசிக் கொண்டது நெருங்கிய உறவினர் சம்பாஷணை போல் தூரத்திலிருந்து தோன்றியது.

ஜீப்பிலிருந்து தான் மட்டும் இறங்கினான்.

சுநீதாவைக் கடத்தி வந்திருக்கிறார்கள் என்று நீல் கமல் செய்தி அனுப்பினாளே... அப்படி இருக்க சுநீதா எப்படித் தப்பினாள்..? கடத்தி வரப்பட்டது வேறு யாரோ ஒரு பெண்ணாக இருக்குமோ... அப்படியானால் சுநீதா பெங்களூருக்கு எப்படி வந்தாள்...? அவளுடன் கூட இருப்பது யார்... கூட இருப்பவனுக்கும் கொள்ளைக் கூட்டத்துக்கும் ஏதேனும் சம்பந்தம் உண்டோ...? இப்படிப் பல கேள்விகள் விநோதின் மனத்தில் வலைய வந்தன.

காரின் பக்கவாட்டில் போனான்.

''ஹாய் விநோத்.... நீங்கதானா.... வாட் எ சர்ப்ரைஸ்!.... இங்கே சந்திப்பேன்னு நெனைக்கவே இல்லை... மீட் மை ஃபாதர் சங்கர்... அப்பா இவர் விநோத்... மை பெஸ்ட் ப்ரண்ட்....''

அவருடைய கையைக் குலுக்கத் தனது வலது கையை நீட்டினான்.

வேண்டா வெறுப்பாகக் குலுக்குபவர் போல் ஒரு துரும்பு போல் அவனைப் பார்த்தவாறு லேசாகச் சங்கர் கை குலுக்கினர்.

சுநீதாவின் முகத்தை விநோத் அளந்தான்.

அதில் ஒளி குறைந்து கவலை ரேகைகள் படிந்து கிடப்பதாக அவனுக்குத் தோன்றியது.

தனக்குள் ஏதோ முடிவுக்கு வந்தவனாக ஜீப்பில் இருந்த இரண்டு போலீஸ்காரர்களையும் கைதட்டி அழைத்தான். அவர்கள் வந்தனர்.

காதில் ஏதோ சொல்லி, பெட்டிக் கடையில் ஏதோ வாங்கிக் கொண்டிருந்த சங்கரனது கார் டிரைவரைச் சுட்டிக் காட்டினான். இருவரும் அவனை அணுகினர்.

தனது பாக்கெட்டிலிருந்து கைத்துப்பாக்கியை மெதுவாக எடுத்தான்.

சங்கருக்கு வெகு அருகில் போய்.

''மிஸ்டர் சங்கர், ஒரு சின்ன ரிக்வெஸ்ட்.. நான் போலீஸ் இலாகாவைச் சேர்ந்தவன். இந்தப் பக்கம் போகிற எல்லா வண்டிகளையும் செக் செய்யச் சொல்லி எங்களுக்கு ஆர்டர். அந்த நிமிஷம் என் ஜீப்பில் உங்கள் டிரைவர் அருகில் உட்கார்ந்து கொண்டீர்களானால் நான் என் வேலையை முடித்துவிடுவேன்.... சாரி ஃபார் த டிஸ்டர்பன்ஸ்... சுநீதா நீயும் உங்கப்பாவோடப் போய் உட்கார்ந்திரு'' என்று விநோத் பவ்யமாகச்சொன்னான்.

''வாட்டு யூ மீன்... ஒ பிஹேவ் யுவர் செல்ஃப்.... என்னைப் பற்றி உனக்குத் தெரியாது....'' சங்கர் சீறினர்.

''வினோத், என்ன இது... ஹி ஈஸ் மை ஃபாதர்...'' மருண்ட குரலில் சுநீதா சொன்னாள்.

''சுநீத் நீ பேசாமல் இரு. என்னுடைய தந்தை இந்த நிலையில் இருந்தாலும் அவருடைய காரை செக் பண்ணித்தான் விடுவேன். என் கடமையை நான் செய்ய வேண்டும்.''

சங்கர் பக்கவாட்டில் எதற்காகவோ திரும்ப எத்தனித்தார்.

படாரென்று கார் கதவைத் திறந்து சங்கரின் மார்புக்கு நேராகத் துப்பாக்கியை நீட்டினான்.

''மிஸ்டர் சங்கர்....! தயவுசெய்து நான் சொல்கிறபடி செய்யுங்கள். எங்களுடைய சந்தேகம் தீர்ந்து உங்கள் மேல் எவ்விதக் குற்றமும் இல்லையென்றால் உங்களைப் பத்திரமாகச் சென்னைக்குக் கொண்டுவிட நானே ஏற்பாடு செய்கிறேன். ப்ளீஸ் ஹெல்ப் மீ டு ஹெல்ப் யூ....''

மேலும் தகராறு செய்தால் நிலைமை மிஞ்சி விடும் என்று எண்ணினாரோ என்னவோ? சங்கர் காரை விட்டுக் கீழே இறங்கினார்.

ஜீப்பை இன்னும் அருகில் வரச் சொன்னான்.

டிரைவர் பக்கத்தில் சுநீதாவையும், இரண்டு போலீஸ் நடுவில் சங்கரையும் அவரது டிரைவரையும் அமரச் செய்தான்.

கடையைச் சுற்றி இருந்த சிலரிடையே இக்காட்சியைக் கண்டு பரபரப்பு. போலீஸ் ஜீப்பையும், துப்பாக்கியையும் கண்டு வாயை மூடி நின்றனர்.

சங்கருடைய காரில் ஒவ்வொரு இடமாகப் பரிசோதித்தான். டிக்கி, சீட்டுக்கு அடியில் என்று ஆரம்பித்து வெளிப்படையாகக் கண்ணால் பார்க்கக்கூடிய இடங்களில் சோதனை முடிந்தது.

இனி ரகசியமான முறையில் பதுக்கி வைத்திருந்தால்தான் முடியும்.

கடத்தப்பட்டதாகச் சொல்லப் பட்ட சுநீதா அக்காரில் இருப்பதால் நிச்சயம் கொள்ளைக் கோஷ்டிக்கும் சங்கருக்கும் ஏதேனும் தொடர்பு இருந்தாக வேண்டும் என்று உள்ளுணர்வு எச்சரித்தது.

டிரைவர் சீட்டில் ஏறி உட்கார்ந்துகொண்டு கண்களைச் சுழல விட்டான்.

அந்தச் சீட்டில் உட்கார்ந்திருப்பதில் ஏதோ ஒரு சங்கட உணர்வு தோன்றுவதை அவனால் உணர முடிந்தது.

என்னவென்று யோசித்தான்.

பிடிபடவில்லை.

இதில் மட்டும் ஏன் இந்த உணர்வு என்று சிந்தனை.

என்னவென்று யோசித்தான்.

பார்வையால் மறுபடியும் காரைத் துழாவினான்.

காரின் நிறம் .... சீட்டுகளின் நிறம் .... பின்பக்கப் பொம்மையின் நிறம் ... காகித மலர்களின் நிறம்.... காலில் கிடந்த ரப்பர் மிதியடியின் நிறம் .... இப்படி எல்லாம் நீல நிறமாக இருக்க ஸ்டீயரிங் மட்டும் ஏன் சிவப்பாய் இருக்கிறது....?

ஸ்டியரிங்கின் மேல் பார்வை நிலைத்ததும் தனது சங்கட உணர்வுக்குக் காரணம் ஸ்டியரிங்குக்கும் தனக்கும் உள்ள இடைவெளி தனது காரில் இருப்பதை விடச் சற்றுக் கூடி இருப்பதுதானோ?

மூளையில் ஒரு தீவிரம்... சிந்தனைத் தொடரில் ஒரு மின்னல்....

செயலில் இறங்கினான். சில நிமிடங்களுக்குள் ஸ்டியரிங் அவனது கையில் தனியாக இருந்தது.

ஸ்டியரிங் ராடினுள் நீளமான ஒரு ஃபைபர் குழல்.

திருகித் திறந்தான்.

கை நிறையப் பளீரென்று மின்னும் வைரக் கற்கள்.

கற்களினூடே ரங்கூன் ராமையா சிரிப்பது போன்றிருந்தது.

'டுமீல்....' திடீரென்று துப்பாக்கி வேட்டு.

படக்கென்று தலையை இழுத்துக் கொண்டான். அவனுக்கான குறி இல்லை.

பார்வையை ஜீப்பினிடம் செலுத்தினான்.

சங்கர் திமிறிக் கொண்டிருக்க அவரது டிரைவர், சுடப்பட்டுச் சாய்ந்து கிடந்தான்.

தப்பி ஓட முயன்ற போது தமது டிரைவர் சுடப்பட்டு விட்டான் என்றுநிலைமை புரிந்ததும் சங்கர் தாமும் தப்ப முயலாமல் அடங்கிப் போனார்.

சுநீதா கேவிக் கொண்டிருந்தாள்.

ஜீப்பும் காரும் பெங்களூரை நோக்கிப் பறந்தன.

•

**தொ**டர்ந்து நான்கு தினங்களுக்குப் பத்திரிகைகளுக்குப் பெருந்தீனி.

சுடச்சுட, சுவையாக செய்திகளைப் பத்திரிகைகள் கொட்டியபடி இருந்தன.

நீல் கமலின் கொலை ... அவளைக் கொன்ற டேவிட்டைப் பழிதீர்த்து ஜோஸ் போலீஸில் சரணானது..கொள்ளைக் கோஷ்டித் தலைவனைச் சாகசமாக வினோத் மடக்கிய திறம் ..கொள்ளை கோஷ்டித் தலைவனின் மகளும் வினோதும் காதலர்கள் ... இப்படிப் பத்தி பத்தியாகக் கட்டம் போட்டுத் தினப் பத்திரிகைகளில் செய்திகள் வந்தன.



''சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு வெற்றிகரமாக முடிந்ததை முன்னிட்டு....''
''முன்னிட்டு....?''
''என் மனைவி 31-12-1979 அன்று ஒரே பிரசவத்தில் மூன்று குழந்தைகளைப் பெற்றாள்!''

தேதி கணக்குப்படி, அன்று சுநீதாவின் பிறந்த தினம்.

மாலை மணி ஆறரை.

இருட்டி விட்டிருந்தது.

மெரினா கடற்கரையில் சீரணி அரங்குக்குப் பின்னால் போட் விளிம்பில் சாய்ந்தபடி ஃபியட்டர் வில்ஸுடன் வினோத் இருந்தான்!

அருகில் சோகமே உருவாய் சுநீதா.

''சுநீத்...! வாழ்க்கையை நினைத்தாலே வேடிக்கையாக இருக்கு... நான் பெங்களூருக்குப் போறதுக்கு முன்னாலே நாம பீச்சுக்கு வந்தோமே, அன்றைக்கும், இன்றைக்கும் இடையில் எவ்வளவு சம்பவங்கள் நிகழ்ந்திருக்கு பார்த்தாயா?''

சுநீதா பேசாமல் இருந்தாள்.

''நீல் கமல் கால் கேர்ல்தான். ஆனா குறுகிய காலத்துக்குள்ளே அவ என் மேலே வெச்ச காதலாலே நாட்டுக்கு எவ்வளவு நன்மை கெடைச்சிருக்கு பார்த்தியா? இந்தக் கோஷ்டிக்கு உங்கப்பா மட்டும் தலைவன் இல்லேன்னு இருந்தா எவ்வளவு மகிழ்ச்சியா இருப்பேன் தெரியுமா? அவருக்கு இது மாதிரி நடவடிக்கைகள் உண்டுன்னு உனக்குக் கொஞ்சம் கூடச் சந்தேகமே வந்ததில்லையா?''

சுநீதா பேசாமல் இருந்தாள்.

''உன்னை என் காதலின்னு கண்டு பிடிச்சு பெங்களூருக்குக் கடத்திண்டு வரச் சொல்லச்சே அது தன் மகள்னு அவருக்கே தெரியாதாம்... உனக்கும் சொந்த அப்பாவே ஆள் வெச்சுத் தன்னைக் கடத்தறார்னு தெரியாது... இது என்ன வேடிக்கையான வேதனை பார்த்தியா?''

சுநீதாவால் பேச முடியவில்லை.

''சுநீத்... உங்கப்பா விஷயம் உனக்குப் பெரிய ஷாக் தான். என்ன செய்யறது... வாழ்க்கையிலே சில சமயங்களிலே இது மாதிரி ஆகி விடுகிறது உண்டு... உனக்குன்னு இனிமே நான் இருக்கேன்.... உனக்கு அம்மா கிடையாது.... அப்பாவுக்கும் இதுமாதிரி ஆகி விட்டது.... இனிமே அப்பா, அம்மா, கணவன் ஆக எல்லா உறவாகவும் என்னை நெனைச்சுக்கோ.... எந்த விஷயத்துலேயும் உன்னைக் கண் கலங்கவே விடமாட்டேன்.. நீ பேசாம இருந்தா வேதனையாலே என் மனசுலே ஏதோ பிசையறது... ப்ளீஸ், சுநீத். ஏதாவது பேசேன்....''

சுநீதாவால் பேச முடியவில்லை.

''சுநீத்.... நீ மட்டும் இப்போ பேசலேன்னா காஞ்சிபுரம் பிச்சைக்காரன் செஞ்ச மாதிரி நான் பேசாம இருக்க மாட்டேன்....''

சொன்னதோடு விடாமல் அவளைத் தன் பக்கமாக மிருதுவாக இழுத்தான்.

ஆதங்கத்தில் ஆழ்ந்து அவனது மடியில் கொடியாக சுநீதா படர்ந்து கேவலானாள்.

மிருதுவாக அவளது முகத்தைக் கையில் ஏந்திக் கொண்டு,

நெற்றியில்—

மூக்கில்—

கன்னத்தில்—

இதழ்களில்—

முத்தங்களாகப் பொழிந்து அவளது கண்ணீரை அடக்க வினோத் முயன்றான்.

அவனது அன்பில் தனது சோகத்தை மறந்து அவனுள் சுநீதா ஐக்கியமாகிப் போனாள்.

(முற்றும்)

---

போலீஸ் பதிவேடுகளில், தேடப்படுபவர்கள் பகுதியில், ஜான் டிகின் என்ற நபரின் புகைப்படத்தையும் அதற்கான வெகுமதி அறிவிப்பையும், ரெவரண்ட்பீபாடி பார்த்துக்கொண்டிருக்கும் போது, படம் உயிர்பெற்று எழுந்து விட்டதுபோல - டிகின் அருகிலுள்ள மதுக்கடைக்குள் நுழைவதைக்கண்டு அதிர்ச்சியுறுகிறார்.

சீட்டாட்டத்தில் மோசடி செய்ததை அறிந்து, டிகின் உதைக்கப்பட்டு, விலங்கிடப் பட்டு வெளியில் நின்றிருந்த ரயிலுக்குள் கொண்டு செல்லப்படுகிறார். ரயிலில் கவர்னர், அவரது மருமகள், டாக்டர், ராணுவ வீரர்கள், ஒரு மேஜர் ஆகியோர் உள்ளனர். ரயில் போய்ச்சேரும் இடத்தில் கடுமையான நோய் பரவியிருந்ததால் ரயிலை பிரேக்ஹார்ட் கணவாயில் நிறுத்த வேண்டிய நிலை ஏற்படுகிறது.

ஓடும் ரயிலில், டாக்டர் அவர் இருக்கையில் கொலை செய்யப் பட்டுக்கிடக்கிறார். இந்த மர்மம், மருந்துப் பெட்டிக்குள் சமிக்ஞைக் குறிப்பு ஒன்று ஒளித்து வைக்கப் பட்டிருந்ததை டிகின் கண்டு பிடித்த தால் மேலும் தீவிரமாகிறது. அடுத்து 70 பேர்களடங்கிய ராணுவசேனையைத் தாங்கி வந்த ரயிலின் கடைசி 3 பெட்டிகள் தனியாகப்பிரிக்கப்பட்டு, மலையிலிருந்து அதள பாதாளத்திற்கு உருண்டோடி நாசமாகும் சம்பவம் நிகழ்கிறது.

இப்படி மர்மங்களும் திகைக்கவைக்கும் சம்பவங்களும் ஒன்றின்பின் ஒன்றாகத் தொடர்கின்றன. கடைசியில் வேலியே பயிரை மேய்வதுபோல் கவர்னரும் மார்ஷலும் கூட்டாக ரயில் சேருமிடத்தில் ஒரு பெட்டகத்தில் இருக்கும் தங்கம்-வெள்ளிகளை வசப்படுத்த எண்ணும் மோசடித்திட்டம் வெளியாகிறது. இறுதியில் டெகின்-மேஜர் விரிக்கும் சட்ட வலையில் இருவரும் பிடிபடுகின்றனர்.

பிரபல நாவலாசிரியரான அலிஸ்டர் மக்ளீனின் பத்தாவது திரைப்படமான இதில் முக்கிய பாத்திரங்களில் சார்லஸ் பிரான்சன், பென்ஜான்ஸன், ஜில் அயர்லண்ட் நடிக்கின்றனர். -டி. எம். ஆர்.

ஒரு ரயில் பயணமும் பல மர்மங்களும்!

BREAK HEART PASS

# அளவுக்கு அதிகமாக எதையும் பயன்படுத்தாதீர்கள்



பொருளோ, மின்சக்தியோ, எரிபொருளோ— எதையும் தேவைக்கதிகமாக உபயோகிப்பதனால் பற்றாக்குறையும், பணவீக்கமும் உருவாகின்றன.

தொடக்கத்திலேயே அதைத் தடுக்க வேண்டும். நமக்குத் தேவையானதை மட்டுமே உபயோகிப்போம். அதிகமானதைச் சேமிப்போம். சேமித்ததைப் பாதுகாப்போம். நமது சேமிப்பை நல்ல முறையில் முதலீடு செய்து அதை அதிகரிக்கச் செய்வோம்.

உயர்ந்த தரமும், உன்னத வேலைப்பாடும் கூடிய தங்க நகைகளை அளிப்பவர்கள் உம்மிடி முரளீதர் ஜுவல்லர்ஸ். நமது சேமிப்பிற்கு ஐந்து வருடங்களில் 18% வட்டி அளித்து அதைப் பாதுகாப்பவர்கள் உம்மிடியார் டெபாஸிட் கார்ப்பரேஷன்.



- உம்மிடி முரளீதர் ஜுவல்லர்ஸ்
- உம்மிடியார் டெபாஸிட் கார்ப்பரேஷன்

53, கதீட்ரல் ரோடு, சென்னை-600 086.
போன்: 83849/89039

Criterion VMJ 3658 TM

# ஒரு டைரக்டர் 'டென்டில்' படம் பார்க்கிறார்

கோ. செல்வராசன்

இயற்கை எழில் பொங்கும் பவானி நதிக்கரை.

பச்சைப் 'பசேர்' வாழைத் தோட்டங்கள் அந்த வாழைத் தோட்டங்களில் ஒன்றைத் தான் பவளராஜா திரைப்படக் குழுவினர் ஆக்ரமித்திருந்தனர். அண்மையில் கேமரா வோடு கிராமங்களைப் படையெடுத்திருக்கும் திரைப் படக் குழுக்களில் அதுவும் ஒன்று.

கேமராமானுக்குஆங்கிளைச் சொல்லிவிட்டு, கதாநாயகனுக்கும், நாயகிக்கும் எப்படி நடிப் பது என்று புரிய வைத்துவிட்டு வெய்யிலுக் காகத் தயாராய்க் காத்திருந்தார் டைரக்டர் பவளராஜா.

சூரியனும் பெரிய மனம் பண்ணி மெதுவே எட்டிப் பார்த்தான்.

''எஸ். ரெடி!''

அந்த யூனிட் சுறுசுறுப்புடன் பரபரத்தது.

வேடிக்கை பார்க்க வந்த ஊர் ஜனங்களை ஒருவர் அப்புறப்படுத்த, சூரிய வெளிச்சத்தை ரெஃப்ளக்டர்கள் கதாநாயகன் — நாயகியின் முகத்துக்குத் திருப்ப ஷூட்டிங்குக்கு அந்தக் குழு தயாராகி விட்டது.

காமெரா தயாரானதும் நடிகர்களுக்குச் சைகை செய்துவிட்டு ''ஸ்டார்ட்!'' என் றார் பவளராஜா. பின்பு—

''ஆக்ஷன்!''

கதாநாயகி ஒரு வெற்று மண் குடத்தை இடுப்பில் வைத்தபடி நடக்க ஆரம்பித்தாள்.

''ஐயோ!....கட்....கட்....'' பவளராஜா கத்தினார்.

புதுமுகக் கதாநாயகி மிரண்டு ''என்ன சார்?'' என்றாள்.

''ஏம்மா.... உண்மையிலேயே தண்ணி இருக்கும் பானையை எடுத்துக்கச் சொன்னா முடியாதுங்கறே. வெற்றுப்பானையை எடுத்துக் கிட்டே.... அட்லீஸ்ட் அதிலே தண்ணி இருக்கிற மாதிரி 'பாவனை' பண்ண வேண்டாமா? இடுப்பைக் கொஞ் சம் கூட வளைக்காமல், 'ஸ்ட் ரெய்ட்டாய்'ப் போனால்! 'காலி யான பானை, காலியான பானை'ன்னு தியேட்டர்லே கத்து வான்களே தெரியாதா?....''

கதாநாயகி நெளிந்தாள்.

''எனக்கு இடுப்பிலே பானை எட்டுப் பழக்கமில்ல....'' என்று தனது 'ராயல் ஃபேமிலி'த்தனத்தைத் தமி ழைக் குதறி வெளியிட்டாள் கதாநாயகி.

தலையிலடித்துக் கொண்டார் பவளராஜா. தமிழ் 'வராத' இவளை சர்ச் பார்க்கிலிருந்து இழுத்துக் கொண்டு வந்து நடிக்கவைக்க ணும்னு லேசுப்பட்ட விஷயமா? கட்டுப் போட்டாலும் அவளுக்குத் தமிழும் வராது. நடிப்பும் வராது.'

''பழக்கம் இல்லேன்னா என்னம்மா? சாகற காட்சியிலே நடிக்கச் சொன்னா செத்துப் பழக்கமில்லேன்னு சொல்லுவியா என்ன?— தோ பார்... வெறும் கமர்ஷியலா நான் படம் எடுக்கறதில்லே... அதனால் கொஞ்சம் 'நேச்சுரலா' நடி....'' என்றார் பவளராஜா.

அவர் அருகில் நெருங்கி வந்தார் தயாரிப் பாளர். டைரக்டரின் 'ரீ டேக்குகளால்' தம்முடைய பட பட்ஜெட் வேஸ்ட்டாகும் பிலிம்களுக்கே சரியாகிக் கையைக் கடிக்குமோ என்ற அச்சம் அவர் முகத்தில் தழைந்தது.

''டைரக்டர் சார்! கதாநாயகி பாப்பாவை



முந்தானேமேலாக்கைச்சரியவிட்டுட்டு நடக்கச் சொன்னீங்கன்னு சரியாயிடும். படம் பார்க்கிற எந்தப் பயலும் இடுப்பிலிருக்கிற காலிக் குடத்தைக் கவனிக்க மாட்டான். ரீ டேக்கும் தேவையில்லே...''

பவளராஜா எரிப்பது போல் அவரை முறைத்தார். ''சார்! என் ரசிகர்கள் என் படத்தைப் பல தடவைகள் பார்ப்பார்கள். ஒரு தடவை 'அங்கே' பார்த்தாங்கன்னு, இன்னொரு தடவை காலிக் குடத்தைப் பார்க்காம விட மாட்டாங்க... நீங்க தலையிடாதீங்க....''

தயாரிப்பாளர் மௌனமாய் விலகிக் கொண்டார். 'பெரிய டைரக்டர் என்று நினைப்பு. நமது அடுத்த படத்தை உதவி டைரக்டரை வைத்துக் கொண்டு நாமே டைரக்ட் பண்ணிவிட வேண்டியதுதான்!'

ரீ டேக்...

இந்த முறை கதாநாயகி கொஞ்சம் சிரமப்பட்டு 'நடித்து'விட்டாள்.

அடுத்த 'ஷாட்' ஓ.கே ஆனதும் காதலர்கள் தழுவிக்கொள்ளும் அடுத்த ஷாட்.

தமிழ் தெரியாத கதாநாயகனும் வசனமில்லாத இந்தக் காட்சியை வெகுவாய் மனத்துக்குள் மெச்சிக் கொண்டு நன்றாக நடித்தான்.

அடுத்துக் கதாநாயகி பக்கம் திரும்பினார், டைரக்டர்.

''ஏம்மா! இளையராஜா என்னமாய்ப்போட்டிருக்கார் பாட்டு? அதுக்கேத்த மாதிரி உணர்ச்சி பாவம் காட்டிக் காதலனை அணைச்சுக்க வேண்டாமா?....''

''அணைச்சுக்கறதிலே எனக்கு முன் அனுபவம்....'' என்று ஏதோ சொல்ல வந்த கதாநாயகி மேலும் தொடர முடியாமல் டைரக்டரைப்பார்த்துத்'திருட்டு முழி'விழித்தாள்.

ரீ டேக்....

காதலர்கள் அணைத்துக் கொள்ளக் காமிரா கூர்ந்து கவனிக்க, காதலியின் இடுப்பிலிருந்த தண்ணீர்க் குடம் கீழே விழுந்து உடைய காமெராவும் கூடவே ஓடிப் படம் பிடித்தது. காதலர்களின் உணர்ச்சி பொங்கி உடைவதை இந்தப் பானை உடைந்து காண்பிப்பதாக அமையும் இந்த சிம்பாலிசக் காட்சியை எத்தனைபேர் புரிந்து கொள்ளப் போகிறார்களோ என்று கவலைப்பட்டார் டைரக்டர்.

அடுத்து பாடல் ஆரம்பம்.

இளையராஜா இன்னிசையுடன் வாழைத் தோப்பில் இறங்கினர்.

''ஆத்து நெறைய தண்ணி ஓடுது—நாத்தங் காலில் ஆயிரம்மீனு துள்ளி ஆடுது....''

இந்த இடத்தில்தான் உதைத்தது.

காதலர்களின் அணைப்பு பாட்டில் மறைந்திருந்த உள்ளர்த்தத்தை வெளிக் கொணரும் படி அமையவில்லை.

எத்தனை'ரீ டேக்'எடுத்தும் சரிப்படவில்லை.

இதற்குள் சூரியன் தன் 'வேலை'யைக் காட்டிவிட்டு மேற்கில் சரிந்து விட்டான்.

எரிச்சலாய் வந்தது டைரக்டருக்கு.

''இந்த ஒரு ஷாட்டுக்காகவே சென்சாரிடம் 'ஏ' சர்டிபிகேட் வாங்கலாம்னு இருக்கேன். 'ஏ' சர்டிபிகேட் வாங்கினால்தான் படம் சக்ஸஸ் ஆகும். அதனால் நாளைக்கு ஷூட்டிங்கில் நீங்க ரெண்டு பேரும் ரொம்ப 'நெருங்ங்கி' நடிக்கணும்...'' என்று பொரிந்து தள்ளி விட்டு வாழைத் தோப்பை விட்டு வெளியேறினர்.



பவானி சாகரில் ஒரு பெரிய வீட்டை வாடகைக்கு எடுத்துக் கொண்டு தங்கியிருந்தது அந்த 'யூனிட்'.

தமது அறையில் புலி பென உலவிக்கொண்டிருந்தார் பவளராஜா. அன்றைய ஷூட்டிங்கில் அவருக்குத் திருப்தியே ஏற்படவில்லை.

கதாநாயகனும் கதாநாயகியும் தமிழ் தெரியாதவர்கள் என்பதனுல் அந்தக் காதல் காட்சியில் வசனத்தைத் தவிர்த்திருந்தார். வெறும் உணர்ச்சியலைகளில் விளையும் காதல் ததும்ப அவர்கள் அணைத்துக் கொள்வதை எப்படியும் வெற்றிகரமாக எடுத்தாக வேண்டும்.

''அந்த ஸீன் ரொம்ப செக்ஸியாம். சென்சாரில் 'கட்' பண்ணிட்டாளும். 'ஏ' சர்டிபிகேட் தந்திருக்கானே பார்க்கலே? நீ வேண்ணு அந்த ஸீனை ரொம்ப 'கூறு' கவனிச்சுப் பார். ரொம்ப ரொம்ப செக்ஸியா....'' என்று ரசிகர்கள் பேசிக் கொள்ள வேண்டும். அதனலேயே படம் பாப்புலராகி....



## "மின்" வெட்டு!

"என்ன வாழ்க்கை இது!"
என்று வெறுப்படைந்து வாழ்க்கையை முடித்
துக் கொள்ள மின்சார வயரில் கை வைத்தேன்.
நாசமாய்ப் போச்சு! "மின்" வெட்டாம்!

இரா. ஸ்ரீதர்

---

டிரைவர் நின்றிருந்தான்.

'என்ன?' என்று கண்களால் கேட்டார், பவளராஜா.

"வந்து.... நம்ப யூனிட்ல எல்லோரும் ஊரைச் சுற்றிப் பார்க்கப் போயிட்டாங்க... நான் சினிமாவுக்குப் போயிட்டு வரலாமான்னு...."

"எந்த ஊருக்கு?"

"இதே ஊர்லதான் சார். பவானிசாகர் 'டெண்ட்'டிலே படம். உங்க படம்தான் நடக்குது. 'செவ்வந்திப்பூ செவந்தாச்சு..'"

பவளராஜாவின் மூளையில் பளிரிட்டது ஒரு யோசனை.

'செவ்வந்திப்பூ செவந்தாச்சு' அவரது முதல் வெள்ளி விழாப் படம். அந்தப் படத்தை இந்தப் பக்கத்து ரசிகர்கள்—அதுவும் கிராம மக்கள் — எப்படி ரசிக்கிறார்கள் என்று அவர்களுடனேயே அமர்ந்து பார்த்தால்?....

"சரி, நானும் வருகிறேன், காரை எடு!"

"**தெ**ன்ன மரத்திலே தென்றல் அடிக்குது செம்பவளக் கிளியே....!"

இளையராஜாவின் குரலில் ஏகப்பட்ட கீறல் களைச் சேர்த்துச் சோம்பேறித்தனமாக இசைத்துக் கொண்டிருந்தது அந்தச் சினிமா டெண்டின் கிராமபோன்.

யாரிடமும் தன்னைக் காட்டிக் கொள்ளாமல் 'ஹை கிளாஸ்' என்று அழைக்கப்படும் ஒரு ரூபாய் டிக்கெட்டில் போய் அமர்ந்தார் பவளராஜா.

'செவ்வந்திப்பூ சிவந்தாச்சு' டைட்டில் கீறல்களுடன் ஓடியது....

பல ஊர்களில் ஓடி ஓடித் தேய்ந்துபோயிருந்த பிலிம் போலிருக்கிறது.

சில காட்சிகள் நகர்ந்தன.

படத்தில் ஒரு முக்கியமான காதல் காட்சி.

காதல் தோல்வியால் கடலில் இறங்கி விட்ட கதாநாயகியை நாயகன் ஓடிவந்து காப்பாற்றித் தூக்கி வருகிறான். ஈர உடையில் இருக்கும் இருவரும் உணர்ச்சி வசப்பட்டு அணைத்துக் கொள்கின்றனர். அந்த அணைப்பை நீடிக்கச் செய்வதற்கு ஒரு பாட்டு. அவர்களின் அசைவுகள் வேறு 'ஸ்லோ மோஷனில்'. சும்மா சொல்லக் கூடாது. கதாநாயகனும் நாயகியும் நன்றாகவே நெருங்கி நடித்திருந்தனர். இளமை உணர்ச்சி வேகத்தை முகத்தில் தேக்கி நாயகன் நாயகியின் நெற்றி — கன்னம் — நெஞ்சு என்று எல்லாம் சென்றார் கத்திரி விழாத வண்ணம் டைரக்டர் சொல்லித் தந்தபடி 'சாமர்த்தியமாய்' முத்தமிட்டுக் கொண்டிருந்தான்.

டெண்ட்டிலிருந்த வாலிபக் கூட்டம் வெறியேறிக் கூவியது. "டேய்.... போதும்டா... உட்டுட்ரு....."

அதே நேரத்தில் திரையில் காட்சி மறைந்தது. டெண்ட்டில் இருள் கவ்வியது.

கரெண்ட் ஆஃப்....

"கரெண்ட் ஆஃப் ஆயிடுச்சுடா...." என்று இருளிலிருந்து கத்தினான் ஒருவன்.

அந்த டெண்டில் விளக்கு வசதி எதுவும் இல்லை. கரெண்ட் போனால் இருட்டுதான்.

கும்மிருட்டில் தலையைப் பிடித்தபடி அமர்ந்திருந்தார் பவளராஜா.

"ஐயோ.... எம்மாடி.... என்னைக் காப்பாத்துங்க....அடபாவி.... உடுடா என்னை!"

திடீரென்று இளம் பெண் ஒருத்தி வீறிட்டுக் கத்தினாள்.

'என்ன இது' என்றபடி இருளில் குரல் வந்த திசையை நோக்கிச் சிலர் குபீரென்று பாய்ந்தனர்!

'யாரோ ஒரு காவாலிப்பய இருட்டிலே ஒரு பொண்ணைக் கையைப் புடிச்சு இழுத்திருப்பான் போலிருக்கு....' என்று ஒருவர் தம் யூகத்தைக் கூறினார்!

பவளராஜாவும் ஒன்றும் புரியாமல் எழுந்து நின்றார்!

ஒரே கூச்சலும் குழப்பமுமாய் மக்கள் சிதறி ஓட பளீரென்று 'கரெண்ட்' வந்தது.

வெளிச்சத்தில்—

பத்துப் பேர் ஒரு வாலிபனை நையப் புடைத்துக் கொண்டிருந்தனர்.

எதிரே ஓர் இளம்பெண் கசங்கிய உடையுடன் அலங்கோலமாக நின்று கொண்டிருந்தாள்.

பெண்கள் பகுதிக்கும் ஆண்கள் பகுதிக்கும் இடையில் ஓரடி உயரத்தில் மட்டுமே ஒரு தடுப்புச் சுவர் இருந்தாலும், கரெண்ட் நின்றுபோய் டெண்ட் முழுவதும் இருள் சூழ்ந்தாலும் அந்த வாலிபன் பக்கத்திலிருந்த பெண்ணிடம் 'விளையாட' முயன்றிருக்கிறான்.

அவள் திடீரென்று கத்திவிடவும் அந்த டூரிங் டாக்கீஸே அமளி துமளிப்பட்டது.

உதை கொடுத்துக் கொண்டிருந்த கூட்டத்திலிருந்து அந்த வாலிபனை மீட்டு, அவனையும் அந்தப் பெண்ணையும் காவல் நிலையத்துக்கு அழைத்துச் சென்றார் டூரிங் டாக்கீஸின் உரிமையாளர். விட்டிருந்தால் அந்த வாலிபனை அடித்தே கொன்றிருப்பார்கள்.

அமளி ஒருவிதமாக அடங்கியதும் கூட்டம் மீண்டும் அமர்ந்தது.

'கயவாளிப் பயலைச் சாகடிக்கணும்...'

'விட்டிருக்கக் கூடாது. கொன்னு போடணும். அப்பத்தான் மத்தவன்களுக்குப் புத்தி வரும்.'

'ம்...காலம் கெட்டுப் போச்சு. இம்மாம் பேர் மத்தியிலே இப்படி நடக்கிறான்களே அந்தப் பொண்ணு தனியா இருந்தா என்ன நடக்கும்'

கூட்டத்தின் இடையறாத 'தொண தொணப்'பில் பவளராஜாவின் காதில் விழுந்த சில விமரிசனங்கள்....

மீண்டும் படம் ஆரம்பித்ததும் 'டெண்ட்' அமைதியாகிவிட்டது.

''நீங்ககூட ஜனங்க மாதிரி அந்த வாலிபனைக் குத்தவாளின்னு நினைக்கிறீங்களா?''

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார் பவளராஜா. திரையில் பட்டுத் திரும்பி எதிரொளித்த வெளிச்சத்தில் ஒரு வயதான கிழவர்!

பவளராஜா தர்ம சங்கடத்துடன், ''பின்னே?'' என்றார்.

கிழவர் படித்தவர் போலிருந்தார். தொடர்ந்து மெதுவாகப் பேசினார். ''இல்லே சார். நம்ம நாட்டிலே நாமும் சரி, சட்டமும் சரி, நேரடிக் குற்றவாளியைத்தான் குற்றம் சாட்டிப்பிடிக்கக் காத்துக் கிட்டிருக்கோம். அந்தக் குற்றம் யாரால் தூண்டப்பட்டதோ அவர் தப்பிச்சுக்கிறார். கொலை செய்தவனை விடக் கொலை செய்யத் தூண்டியவனைத்தான் அதிகம் தண்டிக்க வேண்டும் என்பார்கள். அந்த வகையிலே பார்த்தால் இந்த அசம்பாவிதத்துக்குக் காரணமான இந்தப்படத்தை எடுத்தவனை விட்டு விட்டு, அப்பாவி இளைஞனை ஏன் தண்டிக்கணும் ... எய்தவனை விட்டுட்டு அம்பை ரெண்டா ஒடிச்சுட்டா அடுத்த அம்பு வராதுன்னு என்ன நிச்சயம் ....''

'சுர்ர்' என்று பவளராஜாவின் நெஞ்சில் வலித்தது. தம் ஆற்றாமையை யாரிடமாவது வெளிப்படுத்த வேண்டும் என்பதற்காகப் பவளராஜாவை யாரென்று தெரிந்து கொள்ளாமலேயே யாரைக் குற்றம் சாட்ட வேண்டும் என்று நினைக்கிறாரோ அதே நபரிடம் நியாயம் பேசிக் கொண்டிருந்தார் அந்தப் பெரியவர். ஆனால் பவளராஜா?

''பொழுதுபோக்குன்னாலும் சினிமாவிலே சில நல்லதும் நாட்டுக்குச் செய்யணும் சார். வெறும் டலவினங்களைத் தூண்டிவிட்டுப்பணம் பறிச்சா சினிமாவும் ஒரு ப்ராண்டட் ப்ராஸ்ட்டிட்யூட்தான் சார்...'' — பெரியவர் சொல்லிக்கொண்டிருந்தார்.

அந்தக் கடற்கரைக் காட்சியில் கதாநாயகனையும் நாயகியையும் நெருங்கி நடிக்கச் சொன்னதும், கதாநாயகியின் தொடை வரை துணியை விலக்கி யிருக்கச் சொன்னதும் தாம்தான் என்ற எண்ணம் டைரக்டர் பவளராஜாவை வதைத்தது. இலைமறை காயாக இருக்க வேண்டியதை எச்சில் இலையாக்கித் தெருவில் எறிந்து பலபேர் பார்வையை உறுத்தலாமா?

''இந்த நாட்டுக்கு நீ நன்மை செய்ய வேண்டாம். தீமையாவது செய்யாமலிருக்கக் கூடாதா?'' — திரையில் பவளராஜாவின் வசனத்தைக் கதாநாயகன் வில்லனைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தான்.

அந்த வசனத்தை எழுதும்போது உணராத உண்மையான அர்த்தத்தை டைரக்டர் பவளராஜா இப்போது புரிந்து கொண்டார்!

## காலாபத்தரின் கதை

நிலக்கரிச் சுரங்கத்துக்குள் தண்ணீர் வெள்ளமாகப் பெருக்கெடுத்து விட்டால் உள்ளே பணியாற்றிக் கொண்டிருக்கும் சுரங்கத் தொழிலாளரின் கதி என்ன?

சிறு துளியாக ஒழுகும் தண்ணீர், ஆக்ரோஷமான வெள்ளமாக உருவெடுத்து ஓடுகிறது. அதனால் தூக்கி எறியப்பட்ட ஒரு கரிக்கட்டி அங்குள்ள ஒரு மனிதனின் மேல் விழுந்து விடுகிறது. அவன் மெதுவாக வெள்ளத்தின் அடியில் சிக்கிக் கொள்கிறான். அவன் தப்புவதற்கு வழியேயில்லை, அரை நிமிடப் படப்பிடிப்புத்தான்! ஆனால் ஒருமாத வேலை வாங்கி விட்டதாம். 200 அடி அதல பாதாளச் சுரங்கத்தில் பயங்கரமான சூழலில் படம் எடுக்கப்பட்டது.

இயக்குனர் யாஷ் சோப்ரா, 1974ல் ஏற்பட்ட சஸ்னலா விபத்தை நினைவில் கொண்டு உணர்ச்சிகளைக் கொட்டி இயற்கையின் சீற்றத்தை எதிர்த்து மனிதனின் போராட்டங்களை இப்படத்தில் முழுமையாக வடித்துள்ளார். போடப்பட்ட பட்ஜெட்டுக்கு மேலேயே செலவு ஆயிற்று. ராஞ்சியின் பக்கத்தில் ஆறு சுரங்கங்களைப் பார்த்த பிறகு, சோப்ரா படப்பிடிப்புக்காக ஒன்றைத் தேர்ந்தெடுத்தார்.

படப்பிடிப்பின்போது நடிகர் சசிகபூருக்கு இரு தடவை பேராபாயம் வந்தாலும், காலில் ஏற்பட்ட அடியுடன் தப்பித்தார். ஒருவரை எதிர்பாராவிதமாக மின்சாரம் தாக்கியது. நல்லவேளையாக உயிர் தப்பினார்.

இப்படம் 70mmல் எடுக்கப்பட்டுள்ளது. ஒளிப்பதிவாளர் கோர்காகருக்குப் படப்பிடிப்பில் பெரும் சோதனைகள் இருந்தன. சிலசமயம் கழுத்து வரைக்கும் தண்ணீர் இருந்ததால் காமிராவைத் தலைக்கு மேலே வைத்துக் கொண்டு படம் பிடிக்க வேண்டியது அவசியமாயிற்றும். ஒரு டேக்கின் போது 40 அடி உயரத்தில் நின்று படம் எடுத்த போது, இவருக்குத் தலைச்சுற்றல் ஏற்பட்டதாம்! ஒலிப்பதிவை டேவிட் காம்லின் ஏற்று இப்படத்தின் ஸவுண்ட் ரிகார்டிங் ப்ராஸஸிங்கை லண்டனில் செய்து முடித்தார்.

கதாசிரியர்கள் சலீம்-ஜாவித் மனிதர்களின் உணர்ச்சிகளுக்கே முக்கியத்துவம் தந்து இப்படத்தின் கதையை உருவாக்கியுள்ளனர்.

ஷஷிகபூர், அமிதாபச்சன், ராக்கி, நீது, பாரி ஆகியோர் பிரதான பாத்திரங்களில் வருகின்றனர். ஸஹீரின் பாடலுக்கு ராஜேஷ் ரோஷன் இசை அமைத்துள்ளார். - டி.எம்.ஆர்.



சிற்சபைக் கண்ணும் பொற்சபைக் கண்ணும்
திருநடம் புரியும் திருநட ராஜ
எனக்குஅருள் புரிந்த நினக்குஅடியேன் கைம்
மாற்றை அறிந்திலன் போற்றிநின் அருளே!

— திருஅருட்பா



# RAJMOHAN GANDHI SPONSORS' COMMITTEE

**C-5/27 Safdarjung Development Area, New Delhi-110016**

Though we are not members of any political party we sponsor and support Sri Rajmohan Gandhi as a person of undoubted integrity and outstanding merit with a profound commitment to democratic values.

He is an inheritor of the great moral trad tion of Gandhiji and Rajaji. In his writings and actions as the Chief Editor of the HIMMAT Weekly during the Emergency he displayed extraordinary courage and independence in standing up for democracy against odds.

We feel that he would be a worthy representative not only of his constituency but of the entire democratic opinion in the country. We are sure he will make significant contribution in Parliament and the political arena.

We appeal to all who cherish civil liberties and democratic values to support his candidature and contribute financially for his election to the Lok Sabha from Jabalpur. Remittances may be sent, preferably in the form of Bank Drafts drawn in favour of "Rajmohan Gandhi Sponsors' Committee", to one of the addresses given below:

**Smt. Thankam Viswanathan**
C-5/27 Safdarjung
Development Area,
New Delhi 110016

**Smt. Khorshed Gandhy**
C/o Gallery Chemould,
Jehangir Art Gallery,
Mahatma Gandhi Road,
Bombay

**Sri V. K. Narasimhan**
Editor
The Deccan Herald
Bangalore

படிப்பதற்குப் பிரமாதமாக இருக்கும் சில கதைகள் படமாகும்போது எதிர்பார்த்த அளவு இருப்பதில்லை. அழகாபுரி அழகப்பனுடைய சக்களத்திக்கும் இந்தக் கதி ஏற்பட்டிருந்தாலும் முழுமையான ஏமாற்றமில்லை. ஒரு பிராந்தியத்துச் சமூகத்தினரின் வாழ்க்கை முறையைப் பின்னணியாகக் கொண்ட கிராமக் கதை. பாஞ்சாலியாக ஷோபா வருகிறார். வழக்கப்படி அநாயாசமாக நடிக்கிறார். ஆனால் நம் மனத்தில் நிற்பவர் ஏழு சௌந்தரமாக வரும் ஒய். விஜயாதான். அது பாத்திரத்தின் விசேஷமோ என்னவோ!

பண்ணையார் வீரப்பனாக வரும் விஜயன் பட்டு வேட்டியும் உதட்டில் ஒட்டி நிற்கும் சிகரெட்டுமாகத் தோன்றுகிறார். நம் உள்ளத்தில் நிற்கும்படியாக நடிக்கும் சந்தர்ப்பம் அவருக்கு. அப்பாவி சாமிக்கண்ணுவாக வரும் சுதாகர் நிஜமாகவே அப்பாவியாக இருக்கிறார். எப்போதுதான் நடிப்பின் அடுத்த படிகளில் கால் வைக்கப் போகிறாரோ தெரியவில்லை. அழகம்மையாக வரும் அம்பிகா புது முகத்துக்கு நல்ல முகவெட்டு. பேசும் வசனம் லாகவமாக இருக்கிறது. முன்னுக்கு வரக்கூடிய அறிகுறிகள் தெரிகின்றன.

பாஞ்சாலியின் சக்களத்தி சௌந்தரம் என்று நினைக்கும்படி செய்து முடிவில் அழகம்மையைச் சக்களத்தியாக்கி விருப்பது ஓரளவு சஸ்பென்ஸ்தான். ஆனால் சாமிக்கண்ணுவைப் பாம்பு கடிக்கச் செய்து சாகடிப்பானேன்? சக்களத்தியான அழகம்மையும் சாமிக்கண்ணு மீது விழுந்து பிணமாகிறார். கட்டிய மனைவியை அடக்கியாண்டு ஆசையைத் தணித்துக் கொள்ளும் திராணியற்ற ஆண்பிள்ளையாகச் சாமிக்கண்ணுவை உருவாக்கி முடிவில் சாகடித்திருப்பதன் நோக்கம் என்ன? புரியவில்லை.

இளையராஜாவின் இசை இனிமை, பிரசாத்தின் காமிரா குளுமை. ஆனால் இயக்குனர் தேவராஜ் மோகனின் விசேஷத் திறமை எதையும் காண முடியவில்லையே?

-கௌசிகன்



''வா, நாம ரெண்டு பேரும் யாருக்கும் தெரியாம ரயில் ஏறி பாம்பே போயிடலாம்!''

''போயிடலாம்தான். ஆனா என்னிடம் ரயில் நிறத்துக்கு 'மேட்சா' புடவையில்லையே!''

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

# சக்களத்தி பட விமரிசனம்

# எல்.ஐ.ஸி. நினைவில் வைத்திருக்கிறது....

## உங்கள் பாலிஸி முதிர்வடையும் போது காப்புத்தொகையை உங்களுக்கு அனுப்பவேண்டும் என்பதை.



அது எங்கள் பணியில் ஒரு பகுதி. உங்களுடைய காப்புத்தொகை அல்லது எதிர்பார்த்த தவணைப்பணத்துடன் நாங்கள் உங்கள் இல்லத்திற்கு வருவோம். உங்கள் பாலிஸி முதிர்வடைவதற்கு அல்லது உங்கள் எதிர்பார்த்த தவணைப்பணம் அளிக்கப்பட வேண்டிய நாளிலிருந்து சுமார் இரண்டு மாதங்களுக்கு முன்னரே நாங்கள் நடவடிக்கைகளை ஆரம்பிக்கிறோம். உங்களுக்கு ஒரு முன் பண ரசீது (விடுவிப்பு உரிமைச் சீட்டு) அனுப்பி, நீங்கள் பத்திரங்களை தயாராக வைத்திருக்கவும், முன் பண ரசீதை பூர்த்தி செய்து கையொப்பமிட்டு பாலிஸி பத்திரத்துடன் எங்களுக்கு அனுப்பிய பிறகு பணத்தைப் பெற்றுக்கொள்ளத் தயாராக இருக்கவும் நினைவுபடுத்துகிறோம்.

தேவைகள் குறித்த காலத்திற்குள்ளாக உங்களால் பூர்த்தி செய்யப்பட்டிருந்தால், பல பாலிஸிகளின் விஷயத்தில், முதிர்வடையும் அல்லது எதிர்பார்த்த தவணைத் தேதிக்கு முன்னரே அவைகளுக்குரிய தொகையை பின்தேதியிட்ட காசோலை மூலம் எங்களால் அனுப்ப முடிகிறது.

என்ன இருந்தாலும், உங்கள் பாலிஸி உங்கள் கவலைகளுக்கு விடுதலையளிப்பதாய் இருக்கவேண்டும்; அவைகளுக்குக் காரணமாய் அமையக்கூடாது. உங்கள் பணத்தை அடைய நீங்கள் கடும் முயற்சி செய்யக்கூடாது என்பதை உறுதிப்படுத்த நாங்கள் பாடுபடுகிறோம்.

நாங்கள் எதிர்பார்ப்பதெல்லாம் இவையே—நீங்கள் பாலிஸி போன்ற முக்கிய பத்திரங்களை ஒழுங்காகவும் பாதுகாப்பாகவும் வைத்திருங்கள். பாலிஸி முதிர்வு அடையும் தேதிக்கு வெகு முன்னதாகவே உங்களுடைய சரியான வயதை சான்றுடன் பதிவு செய்து கொள்ளுங்கள். உங்கள் விலாசத்தில் மாறுதல் இருந்தால் எங்களுக்குத் தெரிவியுங்கள். ஒழுங்காக பிரீமியங்களை குறிப்பிட்ட அலுவலகத்தில் செலுத்துங்கள்.

நீங்கள் இவற்றைச் செய்வீராயின், காப்புத் தொகை அல்லது எதிர்பார்த்த தவணைத் தொகையை அடைவதில் எவ்வித தடங்கலும் இருக்காது. உரிய தேதிக்கு ஒரு மாதத்திற்கு முன்னதாகக் கூட முன் பண ரசீது உங்களுக்கு கிடைக்காமல் இருந்தாலும் (மிகச் சில பாலிஸிகளின் விஷயத்தில் மனிதர் அல்லது இயந்திரங்களின் பிழை பாட்டினால் இவ்வாறு நிகழ்ந்து விடுகிறது) அல்லது உரிமைப் பணம் பெறுவது சம்பந்தமாக உங்களுக்கு வேறு சிக்கல் இருந்தாலும் எங்கள் இணைப்பு அலுவலருடன் தொடர்பு கொள்ளுங்கள். அல்லது எங்கள் பகுதி அலுவலகத்தின் உரிமைத் தொகை வழங்கும் அலுவலரைச் சந்தியுங்கள். அவர்கள் மகிழ்ச்சியுடன் உங்களுக்கு உதவுவார்கள்.

உங்கள் பாலிஸிக்காக பெருமுயற்சி எடுத்தல் எங்கள் சிறப்புரிமை, நீங்கள் எவ்விதத் தொல்லையையும் சந்திக்காமல் இருக்க.



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

பாதுகாப்பான எதிர்காலத்திற்கு இன்றே இன்ஷ்யூர் செய்யுங்கள்.

dacunha-LIC-66-TAM

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

குறிப்பிட்ட அம்சங்களில் சட்ட மறுப்பு என்ற யோசனை பிரபலமாகவில்லை என்று சென்னை துப்பறியும் இலாகா கூறியது:

''ஆகஸ்டு முதல் தேதி திருச்சியில் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் இல்லத்தில் ரகசிய காங்கிரஸ் கூட்டம் நடந்ததாகத் தெரிய வருகிறது. இக்கூட்டத்தில் ராஜகோபாலாச்சாரி எத்தனை காங்கிரஸ் ஊழியர்கள் தனி நபர் சட்டமறுப்புச் செய்ய முன்வருவார்கள் என்று நிர்ணயிக்க முயன்றார். ஆனால் கூட்டத்தினரின் அபிப்பிராயம் அதற்கு எதிராகவே இருந்தது.''

திருச்செங்கோடுதான் ஸி. ஆரின் பிரதான செயல்களமாக விளங்கியது. ஆகஸ்டு தொடக்கத்தில் அவர் தாம் ஏற்கெனவே இருமுறை சந்தித்துள்ள கவர்னர் ஸர் ஜார்ஜ் ஸ்டான்லேக்கு எழுதினார்:

''ஒரு கௌரவமான தீர்வு ஏற்பட்டிருக்குமேயானால் என்னைவிட மகிழ்ச்சி அடைபவர் யாரும் இருக்க முடியாது. ஆனால் போராட்டத்துக்குத் தங்களை அர்ப்பணித்துச் சத்தியப் பிரமாணம் எடுத்துக் கொண்டுள்ளவர்களுள் நானும் ஒருவன் என்பதை மேன்மை மிக்க தாங்கள் அறிவீர்கள்.'' காந்தி இர்வின் ஒப்பந்தம் பற்றிக் குறிப்பிட்டு அவர் மேலும் எழுதினார்: ''அரசு ஒப்பந்தத்தை முறித்ததற்குக் காரணம் இந்தியாவில் உள்ள அதிகாரிகள் இந்த ஒப்பந்தத்தை விரும்பவில்லை என்பதுதான் என்று நம்புகிறேன். வைஸ்ராயைச் சந்திக்க மகாத்மா அனுமதி கோரி அதன் மூலம் அமைதியானதும் கௌரவமானதுமான நட்புறவை அரசுக்கும் காங்கிரஸுக்கும் இடையில் ஏற்படுத்த விரும்பினார். ஆனால் இதுவும் கூட மறுக்கப்பட்டது. போராட்டம் மறுபடியும் ஆரம்பமாக வேண்டியதாகிவிட்டது. ஒரு விசுவாசமுள்ள காங்கிரஸ்காரன் என்ற முறையில் நான் என் பங்குக்குக் கஷ்டங்களை ஏற்கச் சித்தமாயிருக்கிறேன்.''

அவர் தமது சகாக்களுடன் சேர்ந்து திருச்செங்கோட்டிலிருந்து சேலத்துக்குப் பாதயாத்திரை செல்வார். வழியில் மக்களுக்குப் போராட்டங்களின் லட்சியங்களை விளக்குவார்.

ஆகஸ்டு 6ந் தேதியும் 7ம் தேதியும் எளிமை மிக்க நகரமான திருச்செங்கோடு மிகுந்த கவனத்துக்குள்ளாயிற்று. சேலம் ஜில்லா மாஜிஸ்டிரேட் எம். வி. கல்யாணசுப்பிரமணியம், ஐ. சி. எஸ்., டி. எஸ். பி.யும், இதர பல அதிகாரிகளும், போலீஸ் பட்டாளமும் உடன் வர அங்கே இரவு முகாமிட்டார்.

காலை மணி ஐந்து அடிக்கவில்லை. ஸி. ஆரும் ஆசிரமத்திலிருந்து ஒரு முஸ்லிம், ஒரு ஹரிஜன், இரு பெண்கள் உள்பட 16 சத்தியாக்கிரகிகளும் புகழ்பெற்ற திருச்செங்கோடு கோயிலின் நாற்பது கால் மண்டபம் நோக்கி நடந்தார்கள். கிளம்புவதற்கு முன்னால், இந்தத் தடவையும் ஆசிரமத்தைக் காப்பாற்றித் தருமாறு சுப்பராயனுக்குக் கோரிக்கை விடுக்க ஸி. ஆர். மறக்கவில்லை.

மண்டபத்தில் அந்த அதிகாலை நேரத்திலும் கூட்டம் சேர்ந்திருந்தது. ஸி. ஆர். விதேசித் துணியைப் பகிஷ்கரிக்குமாறு அறிவுரை வழங்கிப் பேசினார். பின்னர் சத்தியாக்கிரஹக் குழுவினர் கால் நடையாக நகரின் பிரதான வீதிகளில் சென்றனர். கையால் எழுதப்பட்ட துண்டுப் பிரசுரங்களை விநியோகித்தனர். போலீஸ்காரர்கள் அமைதியாக அவர்களைப் பின்தொடர்ந்தனர்.

தாலுக்காக் காரியாலயக் கட்டிடத்தை அவர்கள் அடைந்தபோது, பின்னாலிருந்து ஒரு குரல் அவர்கள் கைதாகி யிருப்பதாக ஒலித்தது. வலதுபுறம் திரும்புமாறு அந்தக் குரல் உத்தரவிட்டது. அவர்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து கட்டிடத்தில் நுழைந்தார்கள்.

உடனடியாக ஒரு வழக்கு நடந்தது. '' 'அயல் நாட்டுத் துணியை வாங்காதீர்கள்' என்று மக்களிடம் வற்புறுத்துவது எவ் உரிமை'' என்றார் ஸி. ஆர். ''சட்டத்தை மீறுவதில் எனக்கு ருசியில்லை. ஆனால் நான் இன்று முறித்திருக்கிற சட்டம் தார்மீக ரீதியிலும் சரி, வேறு எந்த ரீதியிலும் சரி நியாயமானது அல்ல.''

இருத்தத்துக்கு உள்ளாகியிருந்த குற்றச் சட்டத்தின்படி அனைவருக்கும் தண்டனை விதிக்கப்பட்டது. ஆறு மாதம் கடுங்காவல் தண்டனை. ஸி. ஆருக்கு மட்டும் 'ஏ' வகுப்பு சிறைவாசம். ஸி. ஆர். இச்சலுகையைத் தாம் ஏற்பதற்கில்லை என்றார். மாஜிஸ்திரேட் தாம் தீர்ப்பை மாற்ற முடியாது என்று கூறிவிட்டார். போலீஸ் பாதுகாப்புடன் ஒரு பஸ் குழுவினரைச் சேலம் சிறைச்சாலைக்கு அழைத்துப் போயிற்று. அங்கிருந்து ஆண்கள் கோவை மத்திய சிறைக்கும் பெண்கள் வேலூருக்கும் அனுப்பப்பட்டார்கள்.

## 45. சிறைச்சாலைச் சிந்தனைகள்

தண்டனை பெற்றதற்கு மறுநாள் மனச் சங்கடம் அளிக்கும் செய்தி ஸி. ஆருக்கு

✖ டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன்







எட்டியது. ஹிந்துஸ்தான் டைம்ஸ் பத்திரிகையில் சேர, லக்ஷ்மியுடன் டில்லிக்கு வந்த தேவதாஸ், ரயில் நிலையத்திலேயே கைது செய்யப்பட்டார். 'தலைநகருக்குள் அவர் பிரவேசிக்கக் கூடாது' என்ற தடை உத்தரவு அதற்கு முந்தின ரயில் நிலையமான ஹஸ்ராட்நிஜாமுத்தீனில் அவரிடம் தரப்பட்டது. தேவதாஸ், தாம் டில்லிக்கு வருவது ஒரு பத்திரிகையாளன் வேலையை ஏற்பதற்குத்தானேயொழிய சட்ட மறுப்பாளனாக அல்ல என்று விளக்கினார். ஆனால் நிரந்தரமாகச் சட்டமறுப்பு இயக்கத்தைத் துறந்து விடுவதாக வாக்குறுதி அளிக்க மறுத்தார். விளைவு: ஆறு மாத சிறைத் தண்டனை.

இருபத்தோரு வயதான லக்ஷ்மிக்குக் கல்யாணமாகி ஏழு வாரங்களே ஆகியிருந்தன. முன்பின் தெரியாத நகரில் தனியே விடப்பட்டாள். ஸி. ஆர். தாம் சில காலம் மனக் கஷ்டத்துக்கு ஆளானாலும், தமது மகளுக்கு நிலைமையைச் சந்திக்கும் மனோபலம் இருக்கும், எல்லாம் நன்மைக்கே என்ற எண்ணம் தோன்ற, தாம் அமைதியுற்றதாக எழுதினார். டில்லியிலிருந்த நண்பர்கள் லக்ஷ்மியைத் தங்கள் பாதுகாப்பில் ஏற்றுக் கொண்டனர். ஸி. ஆர். அவளுக்கு எழுதினார்:

''நடந்ததை நீ தைரியமாக ஏற்றுக் கொண்ட விதத்துக்கு என் சந்தோஷமான பாராட்டையும் உனக்கு என் அன்பையும் தெரிவித்துக் கொள்கிறேன். 'மனிதன் ஒன்று நினைக்கத் தெய்வம் வேறு விதமாய் நடக்கச் செய்கிறது' என்றுதான் சொல்வார்கள். இங்கே மனிதன் ஒன்று நினைக்க போலீஸ் கமிஷ்னர் வேறு விதமாக நடக்கச் செய்வதாகத்தான் இருக்கிறது.

''நமக்கு எது நல்லது என்பதை நம்மை விட ஆண்டவன் நன்கு அறிவார். எங்கு பார்த்தாலும் நம்மிடம் அன்பும் அற்புதமான ஆழ்ந்த பற்றுதலும் கொண்ட நண்பர்கள் சூழ்ந்திருக்கிறார்கள். இதற்கு நாம் நன்றியுடையவர்களாக விளங்குவோம்.''

தேவதாஸுக்கு அவர் எழுதினார்:

''நமது குறுகிய பார்வை கொண்டு நாம் திட்டமிடுவதை விடச் சிறப்பான விதத்திலேயே கடவுள் அனைத்தையும் அமைத்துத் தருகிறார். நாம் மீண்டும் சந்திக்கும் வரை உள்ளத்தால் நீ எப்போதும் எனக்கு மிக அருகிலேயே இருக்கலாம். லக்ஷ்மி தன் துணிவைக் காட்ட ஒரு சந்தர்ப்பம் கிடைத்ததே என்பதால் நான் நிறைவான மகிழ்ச்சி அடைந்திருக்கிறேன்.''

இரு வாரங்களுக்கு ஒருமுறை ஸி. ஆர். ஒரு கடிதம் பெறலாம். அவர் பதிலுக்கு ஒன்று எழுதலாம். (இரண்டு வாரங்களுக்கு ஒருமுறை யாரேனும் ஒருவர் அவரைச் சிறையில் பார்த்துப் போக வரலாம். இந்தச் சலுகையை அவர் துறந்து விடுவதானால், இரண்டு கடிதங்கள் எழுதவும் பெறவும் அனுமதியுண்டு.) மலபாரிலிருந்து வந்து, ஓராண்டு காலமாகத் தமக்குக் காரியதரிசியாகப் பணியாற்றிக் கொண்டிருந்த பி. சங்கரனுக்கு ஸி. ஆர். தமது கடிதங்களை எழுதினார். ஒவ்வொரு கடிதத்திலும் தமது பந்து மித்திரர்களுக்குச் செய்திகள் எழுதியிருப்பார். சங்கரன் அவற்றை உரியவர்களுக்குத் தெரிவித்து விடுவார். இதே போல் ஆசிரமத்துக்கு வரும் முக்கிய கடிதங்களிலிருந்து கருக்கங்களை ஸி. ஆ.ருக்குத் தாம் எழுதும் கடிதங்களில் சேர்த்து விடுவார் சங்கரன்.

இவ்விதம் ஆறு மாதங்களுக்கு எழுதப்பட்ட கடிதங்கள் தணிக்கைக்கு உள்ளாயின. அவை மூலம் ஸி. ஆ.ரின் சிறை வாழ்க்கை பற்றி சில தகவல்களை அறிய முடிகிறது. சிறை விதிகள் திருத்தப்பட்டு முன்னிலும் கடுமையாக்கப்பட்டிருந்ததால் சிறை அதிகாரிகள் தங்கள் பொறுப்பில் எந்த முடிவும் எடுக்க முடியாதிருந்தது. ஆனாலும் ஸி. ஆர். சந்தோஷமாகவே இருந்தார். மாற்றலாகி வேறு சிறைக்குப் போவதற்கு முன்னால் இரண்டு நாட்களுக்கு சக சத்தியாக்கிரஹி ஸி. ராகவாச்சாரி மிக நன்றாக இவருக்குச் சமைத்துப் போட்டார். அக்டோபர் மாதத்திலும் ஸி. ஆ. ருக்கு நல்ல உணவு கிடைத்து வந்தது. சிறை அதிகாரிகள் அன்புடன் சரியானபடி நடந்து கொண்டனர்.

''எப்படி நேரத்தைச் செலவிடுவது என்று புரியாமல் நான் தவிக்கவில்லை'' என்று ஸி. ஆர் எழுதினார். ''அன்றாடம் செய்யவேண்டிய காரியங்கள் என்று நான் வகுத்துக் கொண்டிருக்கிறேன். அவை வினாடிகளைக் கூட வீணடிக்காத வகையில் நிறைவாக உள்ளன.'' குறள்பாக்களை அவர் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கொண்டிருந்தார். 1932-ல் ''விடுமுறை'' கிடைத்த போது ஆரம்பித்திருந்த சமஸ்கிருதப் படிப்பை இப்போது தொடர்ந்தார். ''சமஸ்கிருதத்தில் நான் என்றைக்குமே பாலர் வகுப்பைத் தாண்டப் போவதில்லை'' என்ற அவர் தேவதாஸுக்கு எழுதினார். ''இருப்பினும் அம்மொழியில் இந்தக் குழந்தை அறிவையாவது பெறுவதில் திருப்தி அடைகிறேன்.''

(தொடரும்)

தமிழாக்கம்: கி. ராஜேந்திரன்

# நாலு பேரிடம் நாலு நூல்கள்

**நாலுபேரிடம் நாலு நூல்களைத் தந்து படிக்கச் சொல்லிவிட்டு ஒரு வாரம் சென்று சந்தித்தபோது:**



## நாளைய மலர்கள்

சமூக சேவகி திருமதி எம். விஜயலக்ஷ்மி கூறுகிறார்:

"ஒரு சமுதாயத்தில் இரு பிரிவுகள்", "ராஜாத்தியின் கதை", என்ற இரண்டு சிறுகதை கொண்ட தொகுப்புதான் இந்தக் குழந்தைகள் நூல். முதல் கதையில் ஏழை—பணக்காரச் சிறுமியின் ஏற்றத் தாழ்வுகளையும் உணர்ச்சிகளையும் ஆசிரியர் அருமையாகச் சித்திரிக்கிறார் 'ராஜாத்தியின் கதை''யில் கிராமப் பற்றுதல் கொண்ட சிறுமியின் மனதிலே அருமையாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். ஆசிரியரின் நடை பிரமாதமாக உள்ளது. ஆனால் சின்னஞ் சிறுவர்களுக்கு இந்த நடை விளங்குமோ என்பது கேள்விக் குறிதான்.



✖ திருமதி விஜயலக்ஷ்மி

இரண்டிலும் கதைப் பிடிப்பு அதிகமாக இல்லை. மேலும் கதை முழுவதும் படித்த நிறைவு ஏற்படவில்லை. சமுதாயத்தில் ஏற்றத் தாழ்வுகளைச் சுட்டிக் காட்டலாம். ஆனால் குழந்தைகள் மனத்தில் பகை உணர்வு வளராத விதமாக எழுத வேண்டும். அன்பு வளரவே வகை செய்ய வேண்டும். பாத்திரப் படைப்பில் ஆசிரியரின் திறமையைக் காண முடிகிறது. கதை வலு அதிகமாக இருந்தால் இன்னும் நன்றாக இருந்திருக்கும்.

'நாளைய மலர்கள்' ஆசிரியர்: ஜாப்லன் வெளியீடு: மாக்மில்லன் கம்பெனி பட்டுல்லாஸ் ரோடு, சென்னை-2



✖ திரு. பன்னீர் செல்வம்

## ஒரு கோட்டுக்கு வெளியே

ஒரு தனியார் நிறுவனத்தின் பணி புரியும் திரு ஆர். வி. சுப்பிரமணியம் சொல்கிறார்:

புத்தகம் விறுவிறுப்பாகச் செல்கிறது. உலகம்மை என்ற ஏழைப் பெண் பணக்காரச் சமூகத்தின் எதிரே படும் துன்பங்களைச் சித்திரிக்கும் கதை இது. ஆசிரியரின் எளிய நடை, கிராமச் சூழ்நிலை, பாத்திரப் படைப்பு ஆகியவற்றை நிச்சயம் பாராட்டத்தான் வேண்டும். இதில் வரும் பழமொழிகள் ரசிக்கும்படி உள்ளன. இந்தியாவின் பொருளாதார நிலையை விளக்கும் இடம் அருமை.

புத்தகத்தின் ஓர் இடத்தில் குடும்பக் கட்டுப்பாட்டுப் பிரசாரம் மறைமுகமாக இருந்தாலும் ரசிக்கும்படியாக இல்லை. தனது தந்தை இறந்த பிறகு உலகம்மை தானே இடுகாட்டுக்கு எடுத்துச் செல்லுதல் நடை முறைக்கு ஏற்புடையதாயில்லை. இது சாத்தியப்படுமா என்று ஆச்சரியமாக உள்ளது.



✖ திரு ஆர். வி. சுப்பிரமணியம்

புத்தகம் முழுவதிலும் திருநெல்வேலி தமிழ் கையாளப்பட்டிருப்பது புதுமையாகவும் அழகாகவும் இருந்தாலும் சற்று ஓவர் டோஸ்தான்.

மேல் சாதிகளோடு கீழ் சாதிகள் நட்போடு இருக்கலாம். ஆனால் தோழமையோடு இருக்க முடியாது என்று ஆசிரியர் சொல்வதை ஒப்புக் கொள்ள முடியாது.

இருப்பினும், கதைக்காகவும் கிராமச் சூழ்நிலைக்காகவும் புத்தகத்தை ரசித்துப் படித்தேன்.

'ஒரு கோட்டுக்கு வெளியே' ஆசிரியர்: சு. சமுத்திரம் வெளியீடு: கிறிஸ்துவ இலக்கிய சங்கம், தபால் பெட்டி 501, பார்க்டவுன், சென்னை-3. விலை ரூ. 10.












''என்னடா உன் மனைவி படுத்த படுக்கையா கெடக்கான்னு சொல்றே. துளிக்கூட வருத்தமில் லாம இருக்கியே?''

''அவ நல்லா இருக்கும்போதும் நான்தான் சமைச்சேன். இப்பவும் நான்தான் சமைக்கிறேன். இதில் வருத்தப்பட என்ன இருக்கு!''

## பாரதியும் உலகமும்

கைவினைஞர் திருமதி ரமா மோகன் தெரிவிக்கிறார்:

பாரதியார் ஒப்பற்ற கவிஞர் பரம்பரையைச் சேர்ந்தவர். தூரனின் தொகுப்பான இப்புத்தகம் இரண்டு பகுதிகளாகப் 'பாரதியார் கவிதைகள்', 'பாரதியார் உரைநடை' என்று வெளிவந்துள்ளது. உரைநடைப் பகுதியில் ''ஜாதி'' என்று தலைப்பிட்டதை ஊரை ஏமாற்றும் ஒவ்வொரு அரசியல்வாதியும் படிக்க வேண்டும். உலகத்தவர் அனைவரையும் ஒரே வயிற்றில் பிறந்தவராகவே பாரதி நினைக்கிறார். ''செல்வம்'' ஓர் அற்புதப் படைப்பு. பிச்சை எடுக்க வந்தவர்களைப் பார்த்து, 'என்னடா உழைத்து ஜீவனம் பண்றது' என்று சொல்வது எளிது. உழைக்கத் தயாராக இருந்தாலும் வேலை கிடைக்காமல் எத்தனையோ பேர் அவதிப்படுகின்றனர் என்பதைப் பாரதியின் எழுத்துக்கள் கூறுகின்றன. பாரதியாரின் கருத்து வயிறு நிறையத் தின்றுவிட்டு வேலை செய்யாமல் இருக்கும் பணக்காரச் சோம்பேறிகளை முதலில் திருத்திவிட்டு, பிறகு ஏழைச் சோம்பேறிகளிடம் வரவேண்டும் என்பது தான்.

இப்படிப் புத்தகம் முழுதும் கருத்து மழை. தூரனின் இந்தத் தொகுப்பு ஒவ்வொரு வீட்டிலும் இருக்க வேண்டிய நூல்.

'பாரதியும் உலகமும்' எழுதியவர்: ம. ப. பெரியசாமி தூரன். வெளியீடு: வானதி பதிப்பகம், சென்னை-17. விலை ரூ 6.

## புதுமுகம் (முதலிய ஓரங்க நாடகங்கள்)

விளையாட்டு வீரர் திரு பன்னீர்செல்வம் சொல்கிறார்:

இந்தப் புத்தகத்தில் பன்னிரண்டு பிரபல எழுத்தாளர்கள் எழுதிய நாடகங்கள் உள்ளன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு சுவையையும், பண்பையும் வெளிக்காட்டுகிறது. பணத்துக்காக மனிதத் தன்மை இல்லாமல் நடக்கும் மக்களைக் காட்டுகிறார் உமாசந்திரன். பெரிய மனிதர்களின் புற வாழ்க்கைக்கும் அக வாழ்க்கைக்கும் உள்ள வேறுபாட்டைக் காட்டுகிறார் வெ. சாமிநாத சர்மா.

''இளங்கோவின் துறவு'' கலைஞர் கருணாநிதியின் எழுத்தில் பாராட்டப்படுகிறது. வாழ்க்கைக்கு விளம்பரம் தேவைதான் என்பதைக் கூறுவது டி. என். சுகி சுப்பிரமணியன் எழுதிய நாடகம். இன்னும் பலரது இனிய நாடகங்கள் ரசிக்கும்படியுள்ளன.

புத்தகத்தில் உள்ள நாடகங்கள் அனைத்துக்கும் படங்கள் வரைந்திருந்தால் மேலும் சுவையாக இருந்திருக்கும்.

'புதுமுகம்' (முதலிய ஓரங்க நாடகங்கள்) தொகுப்பாசிரியர்: டி. என். சுகி சுப்பிரமணியன். வெளியீடு: நேஷனல் புக் டிரஸ்ட், புதுதில்லி. விநியோகிப்பாளர்: பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை-1. விலை ரூ 10-50

பேட்டி: சிக்கி



# SPORTS PICTURE PAGE

விருகம்பாக்கம் அருகிலுள்ள சாலி கிராமத்தில் சிறு தொழில் அதிபர் திரு நாராயணசாமி. இவருக்கு மோட்டார் சைக்கிள் ரேஸில் அலாதி ஈடுபாடு. தமது மோட்டார் சைக்கிளுக்கு ரேஸ் பந்தயத்துக்குத் தேவையான விசேஷ இன்ஜினைப் பொருத்திப் பந்தயங்களில் ஈடுபடுகிருர். விரைவில் இலங்கையில் நடைபெறவிருக்கும் கிராண்ட்ப்ரீயில் கலந்துகொள்ள ஆசைப்படுகிருர். இந்த மோட்டார் சைக்கிள் ரேஸ் பிரியரைப் படம் எடுத்த விதத்தை விளக்குகிருர் புகைப்பட நிபுணர் உத்ரா:

''ஒரு வித்தியாசமான படம் எடுக்க வேண்டும். மோட்டார் சைக்கிள் சக்கரத்தைப் பெரிதாகக் காண்பித்து, அதைவிடச் சிறிதாக மோட்டார் சைக்கிள் உருவைக் காட்டினுல்தான் Impact கிடைக்கும் என்று கருதினேன். ஆகவே மோட்டார் சைக்கிளுக்கு அரை அங்குலம் முன்னுல் தரையில் படுத்துக் கொண்டேன். எனது விசேஷ லென்ஸ் உபயோகப்படுத்தி இந்தக் காட்சியை எடுத்தேன். 1/125—ஃபாஸ்ட் பிலிமில் 22ல் கிளிக் செய்தேன்.

படம்: உத்ரா,
விளக்கம்: குண்டுமணி




**[ஸ்ரீ பெரியவாளின் உரைநடை அழகு தமிழுக்கே பழகிய நாம் இங்கு அவர்களது இலக்கியத் தமிழை இன்புறக் காண்கிறோம். —ஆசிரியர்]**

மார்கழி மாதம் முழுவதும் அதிகாலையிலேயே நீராடி, தெய்விகப் பாவையைக் குறித்து நோற்கப்பட்ட பாவை நோன்பே நம் தமிழ் நாடு முழுவதும் நோற்கப்பட்ட நோன்புகளில் முதன்மையாக விளங்கியது. மார்கழி மாதம் முழுவதும் அதிகாலையில் நீராடி, நெய்யும் பாலும் இல்லாமல் சிறிது மிளகு கலந்த அன்னத்தைப் பொங்கி நிவேதனம் செய்து, மிதமாக உண்டு, அதிகமாக அலங்காரங்கள் செய்து கொள்ளாமல், இந்நோன்பு நோற்பார்கள். ஆண்டாள் திருப்பாவையில் சொல்லும்படி

...பரமனடி பாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம்;
நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம், மலரிட்டு நாம் முடியோம்

திருவாதிரை தினத்தன்று பொங்கலன்னமும் உண்ணமல், நெய் பால் இல்லாமல் வெறும் களியைக் கிண்டிப் பலகாரம் செய்வார்கள். இவ்விரதம் மாதம் முழுவதும் நடந்து பூர்த்தியடைந்ததும்,

வான்பெயல் நனைந்த புறத்த நோன்பியர்
தைவூண் இருக்கையின்

என ''நற்றிணை'' என்னும் சங்க நூலில் கூறியபடி தை மாதம் முதல் இரு தினங்கள் விசேஷ ஆடை ஆபரணங்கள் அணிந்து, நெய்யும் பாலும் அதிகமாகச் சேர்ந்த பாற் பொங்கல் அன்னை உண்டு களித்தார்கள். ஆண்டாளும்

சூடகமே தோள்வளையே தோடே செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும் யாம்
அணிவோம்
ஆடையுடுப்போம், அதன்பின்னே பாற்சோறு
மூட நெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்

என்கிறாள்.

மார்கழி நீராடல் என்பது முறையே திருப்பாவை திருவெம்பாவைகளைச் செய்த ஆண்டாள் காலத்திலோ, மாணிக்கவாசகர் காலத்திலோ புதிதாக ஏற்பட்டதல்ல. ''மார்கழி நீராடுவான் **மேலையோர் செய்வனகள் வேண்டுவன** கேட்டியேல்'' என்று ஆண்டாளே சொல்லியிருப்பதனால் பூர்விக பரம்பரையாக இந்நோன்பு அநுஷ்டிக்கப்பட்டு வந்திருப்பதை விளக்குகிறாள். திருவாதவூரர் புராணத்திலும் மாணிக்கவாசகர் திருவண்ணாமலையில் தங்கியிருந்தபோது, கன்னிகையர் முற்காலத்திலிருந்தே வந்த வழக்கப்படி திருவாதிரை நாளுக்குப் பத்து நாள் முந்தித் தொடங்கி விடியற்காலத்தில் வீடுதோறும் சென்று அங்குள்ளவர்களை அழைத்துக் கொண்டு பாடியபடி குளத்தில் நீராடுவது கண்டே அவர்கள் பாடுவது போலத் திருவெம்பாவை பாடி அவர்களையும் பாடுவித்தது தாக உள்ளது.

பிங்கலந்தை என்னும் நூலில்

பனிநீர் தோயலும் பாவை யாடலும்

என மார்கழி நீராட்டமும் பாவை நோன்பும் குறிக்கப்பட்டிருக்கின்றன.

ஸ்ரீமத் பாகவதத்தில் இந்த நோன்பைப் பற்றிப் பின்வரும் செய்திகள் கூறப்படுகின்றன: 'கோகுலத்துக் குமரிகள் ஹேமந்த ருதுவின் (பனிக் காலத்தின்) முதல் மாதத்தில் அதாவது மார்கழியில், காத்யாயனி பூஜை என்னும் விரதத்தைத் தொடங்கி நடத்தினார்கள். அவர்கள் அருணோதயத்தில் எழுந்து யமுனை நதியில் ஸ்நானம் செய்து, ஈர மணலால் அம்பாளின் பாவையை (பிரதிமையை) அமைத்துப் பூஜை நடத்தினர். 'காத்யாயனி! மஹா மாயே! மஹா யோகினி! ஈச்வரி! எங்களுக்கு நந்தகோப குமாரனை கணவனைப் பதியாக அருள்வாயாக!' என்று பிரார்த்தித்தார்கள். இவ்வாறு ஒரு மாத காலம் விடாமல் அம்பாள்பூஜை செய்துவந்தார்கள். ஸ்ரீ கிருஷ்ண பகவான் அவர்களைப் பரிசோதித்து, பிறகு அவர்களுக்குப் பிரஸன்னராகி அநுக்ரஹித்தார்.' மார்கழி நீராடலுக்கும் பாவை நோன்புக்கும் ஸ்ரீமத் பாகவதத்தில் உள்ள மூலம் இது.

சங்க நூல்களில் ஒன்றான பரிபாடலில், வையை (வைகை) நதியை நல்லந்துவனார் என்ற புலவர் வர்ணிக்கும்போது, மார்கழி மாதத்தில் வரும் பௌர்ணமியோடு சேர்ந்த திருவாதிரையைச் சிறப்பித்திருக்கிறார்.

(சிவபெருமானுக்கு முக்கியமான இந்த நாளைத்தான் ஆண்டாள் திருப்பாவையின் முதல் வரியிலேயே ''மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாள்'' என்பதாக 'நல்ல' என்ற சிறப்பைத் தந்து குறிப்பிடுகிறாள்.)

(தொடரும்)

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras - 600 032. Editor: K. Rajendran

# பொறியைத் தட்டியதுமே...




உங்கள் பூஜை அறைக்கு.
உன்னதமானதொரு விளக்கு!




வீட்டினுள்ளே காம்ப்டாலக்ஸ்
ஒளிரட்டும்...ஓ ..அழகைத்
தனித்தொளிரச் செய்யும்
அதன் பாங்கே சிறப்புத் தான்!

PE-I-4087

காம்ப்டாலக்ஸ், எடுத்துப்பொருத்திடக் கூடிய, எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட். ஷேடுகளோ, விசேஷ இணைப்புகளோ தேவையில்லை. பொறியைத் தட்டுங்கள். வேண்டிய வெளிச்சம் உடனே பரவட்டும்.






1879-1979
100 YEARS
ELECTRIC
LIGHT

# காம்ப்டாலக்ஸ்

எடுத்துப் பொருத்திடலாம் எத்தேவைக்கும் ஏற்ற ஸ்பாட்லைட்

பிலிப்ஸ்

